வள்ளுவர்

# தமிழ் வாசகம்



மூன்றும் புத்தகம்






...க நூற்பதிப்புக் கழகம்
ஈரோடு

வள்ளுவர்

# தமிழ் வாசகம்

மூன்றும் புத்தகம்

புலவர் அ. மு. குழந்தை

தலைமைத் தமிழாசிரியர்,

கோவை நாட்டாண்மைக் கழக உயர்நிலைப்பள்ளி, பவானி.



சிவலிங்க நூற்பதிப்புக் கழகம்

ஈரோடு

பதிவு செய்தது] 1957 [விலை 50 நயே பைசே

(அணு 8)

# முகவுரை

வள்ளுவர் தமிழ் வாசகம் என்னும் பெயர் கொண்ட இந்நூல் வரிசை, அரசியலார் அண்மையில் வெளியிட்ட பாடத் திட்டத்தின்படி எழுதப் பட்டுள்ளது.

இளஞ் சிறுர்கள் விரும்பிப் படித்தற் கேற்ற பலவகைச் செய்திகள் அடங்கிய பாடங்களே இந்நூல் வரிசையில் இடம் பெற்றுள்ளன.

இந்நூல் வரிசையில் இளங் குழந்தைகள் இசையுடன் படித்து இன்புறுதற் கேற்ற இனிய பாடல்களும், பாரதியார் போன்ற பெரும் புலவர்கள் பாடல்களும் வகுப்புக் கேற்றவாறு தரப்பட்டுள்ளன; செய்திகளை விளக்கும் படங்கள் போதுமான அளவு சேர்க்கப்பட்டுள்ளன.

இந்நூல் வரிசை இள மாணவ மாணவிகளுக்கு நல்ல தமிழறிவையும், உலக அறிவையும் ஊட்டி அன்னாரின் எதிர்கால வாழ்க்கையைப் பண்பாடுறச் செய்யும் என்பது எமது நம்பிக்கை.

பவானி
5—10—56

அன்புள்ள
புலவர் குழந்தை.

# தேசீய கீதம்

---

ஜன கண மன அதி நாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

பஞ்சாப ஸிந்து குஜராத மராட்டா
திராவிட உத்கல வங்கா

விந்திய ஹிமாசல யமுனு கங்கா
உச்சல ஜலதி தரங்கா

தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா
ஜன கண மங்கள தாயக ஜயஹே
பாரத பாக்ய விதாதா

ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

# நாட்டு வணக்கம்

---

இந்தியாவின் சுகதுக்கங்களை நிர்ணயிக்கிற நீதான் மக்கள் எல்லோருடைய மனத்திலும் ஆட்சி செலுத்துகிருய்.

நின் திருநாமம், பஞ்சாபையும் சிந்துவையும் குஜ ராத்தையும் மஹாராஷ்டிரத்தையும் திராவிடத் தையும் ஒரிஸாவையும் வங்காளத்தையும் உள்ளக் கிளர்ச்சி யடையச் செய்கிறது.

அது விந்திய ஹிமாலய மலைகளில் எதிரொலிக்கிறது;

யமுனை கங்கை நதிகளின் இன்ப நாதத்தில் கலக் கிறது;

இந்தியக் கடல் அலைகளால் ஜபிக்கப்படுகிறது;

அவை நின் ஆசியை வேண்டுகின்றன; நின் புகழைப் பாடுகின்றன.

இந்தியாவின் சுக துக்கங்களை நிர்ணயிக்கிற உனக்கு வெற்றி, வெற்றி, வெற்றி.

# பொருளடக்கம்

| அ | ஆ | இ | ஈ | உ | ஊ | எ |
|---|---|---|---|---|---|---|
| க | கா | கி | கீ | கு | கூ | கெ |
| ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ |
| ச | சா | சி | சீ | சு | சூ | செ |
| ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ |
| ட | டா | டி | டீ | டு | டூ | டெ |
| ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ |
| த | தா | தி | தீ | து | தூ | தெ |
| ந | நா | நி | நீ | நு | நூ | நெ |
| ப | பா | பி | பீ | பு | பூ | பெ |
| ம | மா | மி | மீ | மு | மூ | மெ |
| ய | யா | யி | யீ | யு | யூ | யெ |
| ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ |
| ல | லா | லி | லீ | லு | லூ | லெ |
| வ | வா | வி | வீ | வு | வூ | வெ |
| ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ |
| ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ |
| ற | றா | றி | றீ | று | றூ | றெ |
| ன | னா | னி | னீ | னு | னூ | னெ |

| ஏ | ஐ | ஒ | ஓ | ஔ | ஃ |
|---|---|---|---|---|---|
| கே | கை | கொ | கோ | கௌ | க் |
| ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ | ங் |
| சே | சை | சொ | சோ | சௌ | ச் |
| ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ | ஞ் |
| டே | டை | டொ | டோ | டௌ | ட் |
| ணே | ணை | ணொ | ணோ | ணௌ | ண் |
| தே | தை | தொ | தோ | தௌ | த் |
| நே | நை | நொ | நோ | நௌ | ந் |
| பே | பை | பொ | போ | பௌ | ப் |
| மே | மை | மொ | மோ | மௌ | ம் |
| யே | யை | யொ | யோ | யௌ | ய் |
| ரே | ரை | ரொ | ரோ | ரௌ | ர் |
| லே | லை | லொ | லோ | லௌ | ல் |
| வே | வை | வொ | வோ | வௌ | வ் |
| ழே | ழை | ழொ | ழோ | ழௌ | ழ் |
| ளே | ளை | ளொ | ளோ | ளௌ | ள் |
| றே | றை | றொ | றோ | றௌ | ற் |
| னே | னை | னொ | னோ | னௌ | ன் |

ஒவ்வொரு வாக்கியத்திலும் குறிப்பிட்ட எழுத்து வந்துள்ள சொல்லை மட்டும் எழுதுக.

| எண் | வாக்கியம் | எழுத்து | சொல் |
|---|---|---|---|
| 1 | நான் அவன் பக்கம் தூங்கினேன். | க்<br>ங் | பக்கம்<br>——— |
| 2 | பச்சைக் கிளி கொஞ்சுகிறது. | ச்<br>ஞ் | ———<br>——— |
| 3 | இது என் பாட்டனுர் வாங்கிய வண்டி. | ட்<br>ண் | ———<br>——— |
| 4 | அத்தை நேற்று வந்தார். | த்<br>ந் | ———<br>——— |
| 5 | இது பாப்பா பம்பரம். | ப்<br>ம் | ———<br>——— |
| 6 | வெற்றிவேல் பழம் தின்ருன். | ற்<br>ன் | ———<br>——— |
| 7 | பாய் மேல் உட்கார். | ய்<br>ர் | ———<br>——— |
| 8 | நல்லோர் செவ்வையாய் நடப்பர். | ல்<br>வ் | ———<br>——— |
| 9 | உள்ளதை உண்டு மகிழ்வாய். | ழ்<br>ள் | ———<br>——— |
| 10 | விஜய லக்ஷிமி புஸ்தகம் வாங்கினுள். | ஜ<br>க்ஷி<br>ஸ் | ———<br>———<br>——— |

ஒவ்வொரு வாக்கியத்திலும் குறிப்பிட்ட எழுத்து வந்துள்ள சொல்லை மட்டும் எழுதுக.

| எண் | வாக்கியம் | எழுத்து | சொல் |
|---|---|---|---|
| 1 | பொன்னு அதோ அண்ணு வருகிறுர். | ணு<br>னு | ——<br>—— |
| 2 | திண்ணை ஓரத்தில் தென்னை இருக்கிறது. | ணை<br>னை | ——<br>—— |
| 3 | உன்னேடு சேர்ந்து கண்ணேய் வந்தது. | ணே<br>னே | ——<br>—— |
| 4 | நெல்லும் கொள்ளும் வாங்கினேன். | லு<br>ளு | ——<br>—— |
| 5 | யானை காட்டில் வாழும். | ழு | —— |
| 6 | மேலே வருவதற்குள்ளே கீழே வந்து விட்டாய். | லே<br>ளே<br>ழே | ——<br>——<br>—— |
| 7 | மாலை வேளையில் வாழைக்கு நீர் பாய்ச்சு. | லை<br>ளை<br>ழை | ——<br>——<br>—— |
| 8 | அறிவுள்ளோர் நல்லோர் ஆவர். | லோ<br>ளோ | ——<br>—— |
| 9 | இனிப் பசி தாழோம். | ழோ | —— |
| 10 | ஸ்ரீமதி புஷ்ப ஹாரம் கட்டுகிருள். | ஸ்ரீ<br>ஷ்<br>ஹா | ——<br>——<br>—— |

படங்களின் பெயர்களையும், அவை இருக்கும் இடங்களையும், அவற்றின் பயனையும் சொல்லுக.



# 1. என் தாயார்



| | | |
|---|---|---|
| நல்லவர் | சோறு | கண்ணே |
| கவனிக்கிருர் | போடுதல் | அழைப்பார் |
| எழுப்புதல் | உண்ணுதல் | ஒப்புவிப்பேன் |
| நீராட்டுதல் | ஊட்டுவார் | சரியாக |
| உடை | தினமும் | மகிழ்ச்சி |
| உணவு | வைத்தல் | முத்தம் |

1. இவர் என் தாயார். இவர் மிகவும் நல்லவர். இவர் என்னை அன்போடு கவனிக்கிருர். இவர் என்னைக் காலையில் எழுப்புகிருர். இவர் என்னை நீராட்டுகிருர். இவர் எனக்கு நல்ல உடைகளைத் தருகிருர். இவர் என் தலையை வாருகிருர். இவர் எனக்குப் பொட்டு வைக்கிருர்.

2. இவர் எனக்குச் சோறு போடுகிருர். இவர் நான் உண்ணும் போது பக்கத்தில் இருக்கிருர். இவர் சில வேளைகளில் எனக்கு உணவு ஊட்டுவார். இவர் 'இன்னும் சாப்பிடு' என்று சோறு போடுவார். இவர் 'கண்ணே! வா' என்று என்னை அழைப்பார்.

3. என் தாயார் 'மகனே படி' என்பார். நான் பாடங்கள் படிப்பேன். இவர் நான் கேட்பதை வாங்கித் தருவார். நான் அவர் சொல்படி நடப்பேன். 'தாய் சொல் கேள்' என்ருர் ஆசிரியர்.

4. தினமும் இவர் என் பாடங்களைக் கேட்பார். நான் பாடம் ஒப்புவிப்பேன் நான் சரியாக ஒப்புவிப்பேன். என் தாயார் மகிழ்ச்சி அடைவார். அவர் எனக்கு முத்தம் தருவார். நான் மகிழ்வேன்.

**கேள்விகள்**

1. உன் தாயார் உனக்கு என்ன செய்கிருர் ?
2. உன் பாடங்களைப் பற்றித் தாயார் என்ன செய்கிருர் ?
3. நீ எதற்கு மகிழ்

பயிற்சி

1. உன் தாயாரும், உன் பாடங்களும் — என்பது பற்றி மூன்று வாக்கியங்கள் எழுது.

2. உன் தாயார் உன்னை எப்படிக் கவனிக்கிருர்—என்பதை மூன்று வாக்கியங்களில் சொல் பிறகு அவற்றை எழுது.

3. நல்லவர், போடுதல், ஊட்டுவார், உடை, மகிழ்ச்சி—ஒவ்வொன்றையும் ஒவ்வொரு வாக்கியத்தில் அமைத்து எழுது.

4. இந்தப் பாடத்தில் எத்தனை பத்திகள் (பாராக்கள்) இருக்கின்றன ?

5. எழுத்து, சொல், வாக்கியம்—ஒவ்வொன்றுக்கும் ஓர் உதாரணம் எழுது.

# 2. எங்கள் பள்ளி

| | | |
|---|---|---|
| தொடங்குகிறது | இறைத்தல் | தக்காளி |
| படிக்கின்றேன் | மல்லிகை | பாய்ச்சுதல் |
| முடிகிறது | இருவாட்சி | மாலைவேளை |
| மறுபடி | சாமந்தி | பிரியம் |

**அண்ணன் :** கண்ணா, உங்கள் பள்ளி எங்கே இருக்கிறது?

**கண்ணன் :** அண்ணா, எங்கள் பள்ளி வடக்குத் தெருவில் இருக்கிறது.

**அண்ணன் :** உங்கள் பள்ளியில் எத்தனை வகுப்புகள் இருக்கின்றன ?

**கண்ணன் :** எங்கள் பள்ளியில் ஐந்து வகுப்புகள் இருக்கின்றன.

**அண்ணன் :** உங்கள் பள்ளியில் எத்தனை ஆசிரியர்கள் இருக்கிறார்கள் ?

**கண்ணன் :** ஐந்து ஆசிரியர்கள் இருக்கிறார்கள்.

**அண்ணன் :** நீ எந்த வகுப்பில் படிக்கிறாய் ?

**கண்ணன் :** நான் மூன்றும் வகுப்பில் படிக்கிறேன்.

**அண்ணன் :** உங்கள் பள்ளி எப்பொழுது தொடங்குகிறது ? எப்பொழுது முடிகிறது ?

**கண்ணன் :** காலை எட்டரை மணிக்குத் தொடங்குகிறது. பகல் 11 மணிக்கு முடிகிறது. மறுபடியும் பகல் 2 மணிக்குத் தொடங்குகிறது. நாலரை மணிக்கு முடிகிறது.

**அண்ணன் :** உங்கள் பள்ளியில் தோட்டம் இருக்கிறதா ?

**கண்ணன் :** ஆம், இருக்கிறது.

**அண்ணன் :** அதில் என்னென்ன பயிர் செய்திருக்கிறீர்கள் ?

**கண்ணன் :** எங்கள் பள்ளித் தோட்டத்தில் பலவகையான பயிர் செய்திருக்கிறோம், அதில் ரோஜா, சாமந்தி, சூரிய காந்தி முதலிய பூச் செடிகள் உள்ளன. மல்லிகை, முல்லை, இருவாட்சி, முதலிய பூங் கொடிகள் இருக்கின்றன. கத்தரி. கொத்தவரை, வெண்டை, தக்காளி முதலிய காய்

கறிச் செடிகள் உள்ளன. அரைக்கீரை, தண்டுக்கீரை இருக்கின்றன. தோட்டத்தின் ஓரமாக வாழை மரங்கள் உள்ளன. பப்பாளி, கொய்யா, மாதுளே, முருங்கை மரங்களும் இருக்கின்றன. மாலே வேளேயில் நாங்களே தண்ணீர் பாய்ச்சுகிருேம்.

அண்ணன் : நீங்களா தண்ணீர் பாய்ச்சுகிறீர்கள் ?

**கண்ணன் :** ஆம் அண்ணு; தோட்டக்காரன் இல்லே. பிள்ளேகளாகிய நாங்களே செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சுகிருேம். தோட்டத்தில் கிணறு ஒன்று இருக்கிறது; நாங்கள் அதிலிருந்து நீர் இறைப்போம். நீரை வாய்க்காலில் விடுவோம். அந்த நீரை செடிகளுக்குப் பாய்ச்சுவோம்.

அண்ணன் : அப்படியா ! கண்ணு, நீயும் தோட்ட வேலே செய்கிருயா ?

**கண்ணன் :** ஆம் அண்ணு ; எனக்கு அதில் பிரியம் அதிகம்.

**கேள்விகள்**

1. உங்கள் பள்ளியில் உள்ள வகுப்புகள் எத்தனே ?

2. பள்ளித் தோட்டத்தில் உள்ள செடிகள் கொடிகள், மரங்கள் எவை ?

3. செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சுவது எப்படி ?

## பயிற்சி

1. உங்கள் பள்ளிக்கூடம் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

2. பள்ளித் தோட்டம் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது.

3. ஆசிரியர், பிரியம், கிணறு—தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

4. நீ எந்த வகுப்பில் படிக்கிறாய்? நீரை வாய்க்காலில் விடுவோம்—ஒவ்வொரு வாக்கியத்திலும் எத்தனை சொற்கள் இருக்கின்றன ?

5. வாழை மரங்கள் உண்டு. தோட்டக்காரன் இல்லை.

உண்டு, இல்லை-என்னும் இரண்டு சொற்களும் ஒரே பொருள் உடையவை அல்ல. அவை எதிரான பொருள் உள்ளவை. 'உண்டு' என்னும் சொல் 'இல்லை' என்னும் சொல்லின் எதிர்ச்சொல் அல்லது எதிர்ப்பதம். × இந்த அடையாளம் எதிர்ப்பதம் என்பதைக் குறிக்கும்.

உண்டு × இல்லை இல்லை × உண்டு

தொடங்குகிறது × முடிகிறது

———

## 3. திருக்குறள்

| | | |
|---|---|---|
| விளக்கமாக | அறத்துப்பால் | முப்பால் |
| அவ்வளவு | பொருட்பால் | அல்லாமல் |
| பழந்தமிழ் | இன்பத்துப்பால் | பொதுநூல் |
| உலகமொழிகள் | பிரிவினை | வான்புகழ் |

தம்பி : அக்கா, நீ என்ன பாடம் படிக்கிருய்?

அக்காள் : நான் திருக்குறள் படிக்கிறேன். தம்பி, நீ திருக்குறளைப் பற்றித் தெரிந்து கொள்ளுதல் வேண்டும்.

தம்பி : அக்கா, தெரிந்து கொள்ளுகிறேன்; விளக்கமாகச் சொல்.

அக்காள் ; தம்பி, திருக்குறள்-திருவள்ளுவர் செய்தது, இது இரண்டாயிரம் ஆண்டு களுக்கு முன் செய்யப்பட்டது. அவ் வளவு பழந்தமிழ் நூல் திருக்குறள்!

அறத்துப்பால், பொருட்பால், இன்பத்துப் பால் எனத் திருக்குறள் மூன்று பிரிவினை உடையது, அதனுல் திருக்குறள்-முப்பால் எனப்படும். திருக்குறள் ஆயிரத்து முந்நூற்று முப்பது (1330) பாட்டுக்களை உடையது.

திருக்குறள் சிறந்த தமிழ் நூல். திருக் குறள் போன்ற ஒரு நூல் உலக மொழிகள்

ஒன்றிலும் இல்லை. தமிழ் மொழிக்கும் தமிழர்க்கும் சிறப்பினைத் தருவது திருக்குறள்.

திருக்குறள் உலக மொழிகள் பலவற்றில் மொழி பெயர்க்கப்பட் டுள்ளது. திருக்குறளைத் தமிழ் மக்களாகிய நாமே அல்லாமல் உலக மக்கள் எல்லோரும் படித்து வருகின்றனர். திருக்குறள் உலகப் பொது நூல்,

"வள்ளுவன் தன்னை உலகினுக் கேதந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"

என்பது பாரதியார் பாடல்.

### கேள்விகள்

1. திருக்குறள் யாரால் எப்போது செய்யப் பட்டது ?
2. திருக்குறள் எத்தனை பிரிவினை உடையது?
3. திருக்குறள் எத்தனை பாட்டுக்களை உடையது ?

### பயிற்சி

1. திருக்குறள் சிறப்பினைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

2. பிரிவினை, உலகமொழிகள், எல்லோரும்—தனித்தனி வாக்கியத்தில் அமைத்துக் கூறு.

3. கோடிட்ட இடத்தை நிரப்பு :

1. திருக்குறள் ———— சிறந்த ——— நூல்.
2. திருக்குறள் ———— பொது ———.

---

# 4. பேகனும் மயிலும்



| | | |
|---|---|---|
| போர்வை | கொடை | உலாவுதல் |
| வேடிக்கை | வருத்தம் | ஓய்ந்து |
| அரசன் | பொருதவன் | குளிர் |
| பேகன் | வள்ளல் | இரக்கம் |

குறிப்பு : கீழேயுள்ள கதையை மனத்திற்குள் படி. படித்த பிறகு சொல்.

1. இந்தப் படத்தைப் பாருங்கள். இது ஒரு பூந்தோட்டம். இதில் ஒருவன் மயிலுக்கு போர்வை போர்த்துகிறான். இது

என்ன வேடிக்கை! இவன் யார்? ஏன் மயிலுக்குப் போர்வை போர்த்துகிறான்?

2. இவன் ஒரு பழந்தமிழ் அரசன். இவன் பெயர் பேகன். இவன் மிகுந்த கொடைக்குணம் உடையவன். இவன் பிறர் வருத்தம் பொறுதவன். இவன், பிறர் கேட்பதை இல்லை என்னுமல் கொடுப்பவன். அதனுல், 'வள்ளல்' எனப் பெயர் பெற்றுன்.

3. பேகன் ஒரு நாள் உலாவப் போனுன். அவன் ஒரு பூந்தோட்டத்திற்குள் நுழைந்தான். அங்கு மயில் ஒன்று இருந்தது. அது மழைக் காலம். மழை பெய்து ஓய்ந்திருந்தது. மழை என்றுல் மயிலுக்கு மகிழ்ச்சி அல்லவா? அதனுல், அது தன் அழகான தோகையை விரித்து ஆடிக் கொண்டு இருந்தது.

4. பேகன், மயில் ஆடுவதைக் கண்டான். அவன் மயில் குளிரால் வருந்துவதாக எண்ணினுன். அவன் அதன் மீது இரக்கம் கொண்டான். பேகன் தன் போர்வையை எடுத்தான். அதனை மயிலின் மீது போர்த்தினுன். அப் போர்வை மிக்க விலை உடையது. நீங்கள் பேகனைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

### கேள்விகள்

1. படத்தில் என்ன பார்க்கிறீர்கள்?
2. பேகன் யார்? அவனைப்பற்றி என்ன தெரியும்?
3. மயில் என்ன செய்தது? ஏன் செய்தது?
4. பேகன் ஏன் அதற்குப் போர்வை போர்த்தான்?
5. பேகனைப் பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

### பயிற்சி

1. பேகனைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது.

2. மயிலைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது.

3. பூந்தோட்டத்தைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

4. போர்வை, தோகை, இரக்கம்—ஒவ்வொன்றையும் தனித்தனி வாக்கியத்தில் எழுது.

5. கோடிட்ட இடங்களை நிரப்பு:

1. பேகன்———கொடைக்குணம்——.
2. போர்வை——விலை——.
3. மழை——மயிலுக்கு——அல்லவா?

---

# 5. பாப்பா—பாட்டு



| | | | |
|---|---|---|---|
| அண்டி | தெய்வம் | தேம்பி | அமிழ்தம் |
| பிழைக்கும் | துணே | திடம் | இனிது |
| ஆதரித்தல் | தீங்கு | போராடு | ஆன்ருேர் |
| புறஞ்சொல்லல் | சோம்பல் | கெடுதி | திருநாடு |

வண்டி இழுக்கும் நல்ல குதிரை—நெல்
வயலில் உழுதுவரும் மாடு.
அண்டிப் பிழைக்கும்நம்மை ஆடு—இவை
ஆதரிக்க வேண்டுமடி பாப்பா.

பொய்சொல்லக் கூடாது பாப்பா—என்றும்
புறஞ்சொல்லல் ஆகாது பாப்பா.
தெய்வம் நமக்குத்துணே பாப்பா—ஒரு
தீங்குவர மாட்டாது பாப்பா.

சோம்பல் மிகக்கெடுதி பாப்பா—தாய்
சொன்னசொல்லைத் தட்டாதே பாப்பா.
தேம்பி அழுங்குழந்தை நொண்டி—நீ
திடங்கொண்டு போராடு பாப்பா.

தமிழ்த்திரு நாடுதனைப் பாப்பா—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா.
அமிழ்தில் இனியதடி பாப்பா—நம்
ஆன்றோர்கள் தேசமடி பாப்பா.

—பாரதியார்

பயிற்சி 1

1. பிரித்து எழுது :

**உதாரணம்:** பூந்தோட்டம் — பூ தோட்டம்

1. அதிலிருந்து —
2. தாயென்று —
3. இனியதடி —
4. போராடு —
5. புறஞ்சொல்லல் —

2. தனிவாக்கியங்களைப் பிரித்து எழுது :

**உதாரணம் :** நான் பாடம் சரியாக ஒப்புவிப்பேன்

நான் பாடம் ஒப்புவிப்பேன்.

நான் சரியாக ஒப்புவிப்பேன்.

1. முல்லைக் கொடியும் கத்தரிச் செடியும் இருக்கின்றன.

2. மயில் தோகையை விரித்து ஆடிக் கொண்டு இருந்தது.

3. மல்லிகை, முல்லைக் கொடிகள் இருக்கின்றன.

பயிற்சி 2

1. சேர்த்தெழுது :

**உதாரணம் :** ஒன்று இருந்தது —ஒன்றிருந்தது

1. உணவு ஊட்டுகிறார் —
2. அவர் எனக்கு —
3. விலை உடைய —
4. வயலில் உழுதுவரும் —

2. இரண்டு வாக்கியங்களையும் ஒன்று சேர்த்து எழுது :

**உதாரணம் :** எப்பொழுது தொடங்குகிறது ?

எப்பொழுது முடிகிறது ?

எப்பொழுது தொடங்கி எப்பொழுது முடிகிறது ?

1. காலை 8–30 மணிக்குத் தொடங்குகிறது.
   பகல் 11 மணிக்கு முடிகிறது.
2. என் தலையை வாருகிறார்.
   எனக்குப் பொட்டு வைக்கிறார்.
3. நீரை வாய்க்காலில் விடுவோம்.
   நீரைச் செடிகளுக்குப் பாய்ச்சுவோம்.

# 6. வீரன் வீரன் ஆனுன்

| | | |
|---|---|---|
| உரம் | குத்துச்சண்டை | தாவுதல் |
| சர்க்கஸ் | வியப்பு | பயிற்சி |
| சோம்பேறி | விரும்பினுன் | மெய்யாகவே |
| மற்போர் | தினந்தோறும் | வீரம் |

1. வீரன் என்பவன் சுறுசுறுப்பு



இல்லாதவன். அவன் ஒரு வேலேயும் செய்ய மாட்டான்; எப்போதும் சோம்பலாகவே இருப்பான். அதனுல், அவன் உடல் உரம் இல்லாமல், பார்ப்பதற்குக்கிழவனேப்போல இருந்தான். எல்லோரும் அவனேச் 'சோம்பேறி' என்று இகழ்ந்தனர். வீரன் ஊர் திருமங்கலம்.

2. வீரன் ஊருக்குச் சர்க்கஸ் வந்தது. சர்க்கஸ்காரர் திறமை மிகுந்தவர்கள்.

அவர்கள் மற்போர், குத்துச்சண்டை,



தாண்டுதல், பாரம் தூக்குதல் முதலிய வேலேகளேச் செய்து காட்டினுர்கள்.

3. வீரன் அவ் வேலேகளேக் கண்டான். அவன் வியப்படைந்தான். அவன்

தானும் அவர்களைப் போல ஆக விரும்பி ஞன். அதனுல், அவன் சர்க்கஸில் சேர்ந்து கொண்டான்.

4. வீரன் தினந்தோறும் ஓடுதல், நீந்து தல், தாவுதல், தாண்டுதல் முதலிய பயிற்சி களைச் செய்து வந்தான். பிறகு வீரன் மற்போர், குத்துச்சண்டை இவற்றி லும் தேர்ச்சி பெற்ருன். ஆ! இப்பொழுது வீரன் மெய் யாகவே 'வீரன்' ஆனுன்.



5. வீரன் சில ஆண்டு களுக்குப் பிறகு தன் ஊரு க்கு வந்தான். ஊரார் அவனைச் சூழ்ந்துகொண்ட னர். வீரன் பலவகை உடற் பயிற்சிகள் செய்து காட்டினுன். ஊரார் அவன் திறமையைப் புகழ்ந்தனர். 'இவன் பெயரளவில் வீரனுக இருந் தான். இப்பொழுது செயல் அளவிலும் வீரன் ஆனுன்' என்று அவனைப் பாராட்டி னர்.

### கேள்விகள்

1. வீரன் முதலில் எப்படி இருந்தான்?
2. வீரன் ஏன் சர்க்கஸில் சேர்ந்தான்?

3. உடல் பயிற்சிகள் எவை ?

4. வீரன் 'வீரன்' ஆனது எப்படி ?

5. நீ அவன் செய்தவற்றைச் செய்கிருயா ?

பயிற்சி

1. இந்தப் பாடத்தில் எத்தனை பத்திகள் இருக்கின்றன ?

2. ஒவ்வொரு பத்தியும் தெரிவிக்கும் முக்கியக் கருத்து என்ன ?

இக்கதையின் சாரம் என்ன ?

உதாரணம்: 1-ஆவது பத்தி—வீரன் ஒரு சோம்பேறி ஊரார் அவனை இகழ்ந்தனர் என்பது.

2-ஆவது பத்தி—சர்க்கஸ்காரன் வேலைகள்.

3-ஆவது பத்தி—வீரன் அவர்களைப் போலத் தானும் ஆக எண்ணினான்; சர்க்கஸில் சேர்ந்தான் என்பது.

4-ஆவது பத்தி———.

5-ஆவது பத்தி——.

'ஒவ்வொருவரும் கட்டாயம் உடற் பயிற்சி செய்யவேண்டும்' என்பது இக்கதையின் சாரம்.

———

# 7. கடிகாரம்




| | | |
|---|---|---|
| கடிகாரம் | அப்போது | பங்கு |
| முதல் | அடுத்த | இப்படியே |
| வரை | நிமிஷம் | கொண்டது |
| அல்லவா | நொடி | காலங்காட்டி |

**தம்பி :** அண்ணு, மணி பத்தரை என்று சொன்னுயே, எப்படிக் கண்டு பிடித்தாய் ?

**அண்ணன் :** தம்பீ, இந்தக் கடிகாரத்தைப் பார். இதில், 1 முதல் 12 வரை எண்கள் இருக்கின்றன அல்லவா ? அவற்றுள் ஒவ்வோர் எண்ணும் ஒரு மணியைக் குறிப்பது.

இதில் இரண்டு முட்கள் இருக்கின்றன பார். பெரிய முள் 12 எண்களையும் ஒருமுறை சுற்றிவரும். அப்போது சிறிய முள் ஓர் எண்ணில் இருந்து அடுத்த எண்ணை அடையும். சிறிய முள் மணியைக் காட்டுவது. பெரிய முள் நிமிஷத்தைக் காட்டுவது. நிமிஷத்திற்கு நொடி என்றும் பெயர் உண்டு.

தம்பி : அண்ணா, நொடி என்றால் என்ன?

அண்ணன் : ஒரு மணிக்கு 60 நொடி. நொடி என்பது ஒரு மணி நேரத்தில் அறுபதில் ஒரு பங்கு. கடிகாரத்தைப் பார். இரண்டு எண்களுக்கு இடையில் 5 புள்ளிகள் இருக்கின்றன. அவை 5 நொடிகள். இப்படியே 12 எண்களுக்கும் இடையில் (12 × 5) 60 புள்ளிகள் இருக்கின்றன. நொடி முள் இந்த அறுபது புள்ளிகளையும் ஒருதரம் சுற்றினால் ஒரு மணி ஆகும். ஆதலால், 60 நொடி கொண்டது ஒரு மணி ஆகும்.

தம்பி : எத்தனை மணி கொண்டது ஒரு நாள் ?

அண்ணன் : தம்பீ, ஒரு நாள் 24 மணி கொண்டது. அவற்றுள் பகல் 12 மணி கொண்டது. இரவு 12 மணி கொண்டது. பகல் என்பது காலை 6 மணி முதல் மாலை 6 மணி வரையில் உள்ள நேரம். இரவு என்பது மாலை 6 மணியில் இருந்து காலை 6 மணி வரையில் உள்ள நேரம்.

தம்பி : அப்படியானால், கடிகாரத்தில் 24 எண்கள் இல்லையே! கடிகாரம் ஒரு நாளைக் காட்டாதோ ?

அண்ணன் : தம்பீ, கடிகாரத்தில் உள்ளவை 12 எண்களே. அவற்றைச் சிறிய முள் இரண்டு முறை சுற்றினால் ஒரு நாள் ஆகும். அதாவது, 6 ஆவது எண்ணில் இருந்து சிறியமுள், ஒரு முறை சுற்றினால் பகல் ஆகும். இரண்டாம் முறை சுற்றினால் இரவு ஆகும். இரண்டையும் சேர்த்தால் ஒரு நாள் ஆகும்.

தம்பி : அண்ணா, கடிகாரத்துக்கு வேறு பெயரும் உண்டோ ?

அண்ணன் : ஆம், அது காலம் காட்டுகிறது அல்லவா ? அதனால் அது காலங் காட்டி எனப்படும்.

எதிர்ப் பதங்கள் :

காலை × மாலை   பகல் × இரவு   சிறிய × பெரிய

### கேள்விகள்

1. காலங் காட்டி என்றால் என்ன?
2. கடிகாரம் காலங் காட்டுவது எப்படி?
3. பகல் இரவு என்றால் என்ன ?

### பயிற்சி

1. பகலைப்பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது.

2. இரவைப்பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது.

3. கடிகாரம் காலம் எப்படிக் காட்டுகிறது—என்பதுபற்றி மூன்று வாக்கியங்கள் சொல் ; பிறகு அவற்றை எழுது.

4. காலை, பகல், சிறிய—எதிர்ப்பதங்கள் சொல்.

5. கோடிட்ட இடங்களில் சரியான சொற்களை அமைத்து எழுதுக.

(1) கடிகாரத்தின்——முள்—காட்டுவது.

(2) கடிகாரத்தில்—12——.

(3) ——12——கொண்டது.

6. குறிப்பது, முறை, நேரம், சுற்றுதல்—தனித் தனி வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

# 8. காந்தி தாத்தா



| | | |
|---|---|---|
| உத்தமர் | கொள்கை | அரும்பாடு |
| அருள் | இரக்கம் | அண்ணன் |
| பொறுமை | எளிய வாழ்வு | விடுதலை |
| வெறுத்தவர் | உயர்வுதாழ்வு | உரிமை |
| அமைதி | தீண்டாமை | வாழ்க |

1. இந்தப் படத்தைப் பாருங்கள். இது யார் படம்? சிரித்த முகத்துடன் இருக்கும்

இவர் யார் ? இவர் உங்கள் காந்தி தாத்தா தானே !

2. இவர் உங்களுக்கு மட்டுமா தாத்தா! இவர் உலகத்துக்கே தாத்தா. இவரை அறியாதவர் உலகில் ஒருவரும் இல்லை. இவர் உலகம் போற்றும் உத்தமர் !

3. இவர் எல்லோரிடத்திலும் அன்பாய் இருந்தார். இவர் அருள் நிறைந்தவர். இவர் உண்மையே பேசினர். இவர் மிகவும் பொறுமை உடையவர். இவர் போரை வெறுத்தவர் ; அமைதியை விரும்பினவர். இவர் உலக நன்மைக்குப் பாடுபட்ட உயர்ந்தோர் ! பிறருக்குத் துன்பம் செய்யாமையே இவரது கொள்கை !

4. இவர் ஏழைகளிடம் இரக்கம் உள்ளவர். இவர் ஏழைகளைப் போலவே எளிய வாழ்வு வாழ்ந்தவர் ; ஏழைகளைக் காப்பாற்றவே பிறந்தவர் எனலாம். இவர் மக்களுக்காகவே வாழ்ந்தவர்; மக்களிடம் உள்ள உயர்வு தாழ்வு, தீண்டாமை முதலிய கொடுமைகளைப் போக்க அரும்பாடு பட்ட அண்ணல் !

5. இவர் நம் நாட்டின் தந்தை. இவர் நம் நாட்டு விடுதலைக்காகப் பாடுபட்ட

நல்லோர் ; நம் அடிமை வாழ்வைப் போக்கிய பெரியார்; நாம் உரிமையுடன் வாழ உதவிய உத்தமர்!

6. பல ஆண்டுகள் நம் நாட்டை ஆங்கிலேயர்கள் ஆண்டு வந்தனர். நாம் ஆங்கிலேயர்களுக்கு அடிமையாய் இருந்தோம். நம் காந்தி தாத்தா அடிமை வாழ்வை வெறுத்தார்; ஆங்கிலேயருடன் விடுதலைப் போராடினர்; பலமுறை சிறை சென்றார்; முடிவில் வெற்றி கண்டார்.

15-8-1947ல் நாம் விடுதலை அடைந்தோம். நம் நாட்டு ஆட்சி நம் கைக்கு வந்தது. நம் நாட்டை இப்பொழுது நாமே ஆண்டு வருகிறோம். வாழ்க காந்தி தாத்தா!

### கேள்விகள்

1. காந்தி தாத்தா எத்தகைய குணம் உடையயவர் ?
2. அவர் யாருக்காகப் பாடுபட்டார் ?
3. அவர் நமக்குச் செய்த நன்மை என்ன ?

### பயிற்சி

1. காந்தி தாத்தாவின் குணம் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

2. அவர் நமக்குச் செய்த நன்மை பற்றி மூன்று வாக்கியங்கள் சொல். அவற்றை எழுது.

3. பொறுமை, விடுதலை, சிறை—தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

4. கோடிட்ட இடங்களை நிரப்பு:

1. இவர்———போற்றும்———.
2. ———மிகவும் ———உடையவர்.
3. நாம்———வாழ———உத்தமர்.

# 9. பால்காரி

| | | |
|---|---|---|
| புறப்பட்டாள் | எண்ணினுள் | நெருங்குதல் |
| அமர்ந்தாள் | இடும் | ஐயையோ |
| வாசல்படி | பொரிக்கும் | பாவம் |
| பின்வருமாறு | மதிக்க | தவறு |

குறிப்பு: கீழே யுள்ள கதையை மனத்திற்குள் படி. படித்த பிறகு சொல்.

1. ஓர் ஊரில் ஒரு பால்காரி இருந்தாள். ஒரு நாள் அவள் பால் விற்கப் புறப்பட்டாள். போகும் போது மழை வந்தது. அதனுல், அவள் ஒரு வீட்டுத் திண்ணை மீது அமர்ந்தாள். பால் குடத்தை வாசல் படியில் வைத்தாள்.

2. மழை பெய்துகொண்டே இருந்தது பால்காரி பின்வருமாறு தனக்குள்ளே எண்ணினுள். "நான் இந்தப் பாலை விற்பேன்; அந்தப் பணத்திற்குக் கோழிகள் வாங்குவேன். கோழிகள் முட்டையிடும். அந்த முட்டைகள் குஞ்சு பொரிக்கும். அக் குஞ்சுகள் பெரியவை ஆனதும் அவற்றை விற்பேன். இப்படியே செய்தால் எனக்கு மிகுந்த பணம் கிடைக்கும். நான் பணக்காரி ஆவேன்."

3. "அப்பொழுது ஊரில் உள்ள பணக் காரப் பெண்கள் என்னிடம் வருவார்கள். அவர்கள் என் காலண்டை வந்து உட்காரு வார்கள். அவர்கள் என்னிடம் பேசத் தொடங்குவார்கள். நான் அவர்களை மதிக்க மாட்டேன். அவர்கள் மேலும் பேச என்னை நெருங்குவார்கள். அப்பொழுது நான் அவர்களை இப்படித்தான் உதைப்பேன்."




4. இப்படிச் சொல்லிக் கொண்டே அவள் வாசற்படி மீது இருந்த பால்குடத்தை உதைத்தாள். ஐயோ பாவம்! உடனே பால் குடம் உருண்டது. பால் தரையில் வழிந்து ஓடிற்று. அப்பொழுதுதான் பால்காரி தான்

செய்தது தவறு என்பதை அறிந்தாள். அவள் வருத்தத்தோடு வீடு திரும்பினுள்.

**கேள்விகள்**

1. பால்காரி ஏன் பால் விற்கப் போகவில்லை ?
2. அவள் எங்கே தங்கினுள் ? பால் குடம் எங்கே இருந்தது ?
3. அவள் என்ன நினைத்தாள் ?
4. அவள் ஏன் பால் குடத்தை உதைத்தாள் ?
5. இப் பாடத்தால் நீ அறியும் நீதி யாது ?

**பயிற்சி**

1. பால்காரி நினைத்ததை மூன்று வாக்கியங்களில் சொல்: பின்னர் அவற்றை எழுது.

2. மழையைப்பற்றி மூன்று வாக்கியங்கள் சொல் ; பின் அவற்றை எழுது.

3. பால்காரி, பணக்காரி, மதிப்பு, அமர்ந்தாள், பின்வருமாறு — ஒவ்வொன்றையும் தனித் தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

4. கோடிட்ட இடங்களை நிரப்பு:

1. நான்——மதிக்க——.
2. படிமீது——பால்——உதைத்தாள்
3. அந்த——குஞ்சு——.

5. 3-ஆவது பத்தியின் கருத்து என்ன ?

# 10. அம்மா—பாட்டு

| | | |
|---|---|---|
| அன்புரு | முடித்தல் | ஆடை |
| என்ருல் | நலமாய் | உடுத்துவை |
| கிளிமொழி | நாளும் | தேடுவை |
| இருமுறை | நீராட்டி | வளர்ப்பவர் |

1. அம்மா! அம்மா! என்னம்மா!
அன்புரு வான பொன்னம்மா!

2. ஒருமுறை 'அம்மா!' என்ருலே,
இருமுறை 'கண்ணே!' என்பாயே.

3. கிளிமொழி பேசி வருவாயே,
கேட்பதை எல்லாம் தருவாயே.

4. பாடம் படித்து முடித்தவுடன்,
பாட்டுச் சொல்லித் தருவாயே.

5. பள்ளிக் கூடம் போய்வந்தால்,
பாங்காய் முத்தம் தருவாயே.

6. நாளும் எனக்கு நீராட்டி
நலமாய் ஆடை உடுத்துவையே.

7. என்னைக் காணு விட்டாலே
பொன்னைப் போலத் தேடுவையே.

8. அம்மா! என்னை உன்போல
அன்பாய் வளர்ப்பவர் யாருண்டே!

## பயிற்சி 3

I. கீழ்க்கண்ட வாக்கியங்களை முடி :

1. தினமும் இவர் என்——.
2. பலவகை உடற் பயிற்சி——.
3. பிள்ளைகளாகிய நாங்களே——
4. மழை என்றால்——.
5. அவன் பெயரளவில்——

2. ஒரே பொருள் உள்ள சொற்களை ஒன்று சேர் :

| | |
|---|---|
| கடிகாரம் | போகும் |
| தரம் | கெடுதி |
| அதிகம் | மீதி |
| அமர்ந்தாள் | காலங்காட்டி |
| தொடக்கம் | முறை |
| நேரம் | மிகுதி |
| புகழ்ந்தனர் | உட்கார்ந்தாள் |
| மேல் | ஆரம்பம் |
| செல்லும் | காலம் |
| அபாயம் | பாராட்டினர் |

## பயிற்சி 4

I. வீரன் ஊர் திருமங்கலம்.
வயலில் உழுதுவரும் மாடு.
நான் ஒரு கோழி வாங்குவேன்.
வண்டி இழுக்கும் நல்ல குதிரை.

வீரன்—இது ஒரு பையனுடைய பெயர்.

திருமங்கலம்—இது ஓர் ஊரின் பெயர்.

வயல்—ஓர் இடத்தை அறிவிக்கும் பெயர்.

மாடு—ஒரு விலங்கைக் குறிக்கும் சொல்.

கோழி—ஒரு பறவையைக் குறிக்கும் சொல்.

வண்டி—ஒரு பொருளைக் குறிக்கும் சொல்.

இவ்வாறு மக்கள், விலங்கு, பறவை, பொருள், ஊர் முதலிய இடங்கள் இவற்றைக் குறிக்கும் சொற்களுக்குப் 'பெயர்ச் சொற்கள்' என்று பெயர். ஒரு சொல் ஏதாவது ஒன்றன் பெயர் ஆனால், அச் சொல் பெயர்ச் சொல் ஆகும்.

2. கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள பெயர்ச்சொற்களை எடுத்து எழுது.

1. சேவல் காலையில் கூவுகிறது.
2. மயில் மாலையில் ஆடுகிறது.
3. வீரன் ஊர் திருமங்கலம்.
4. நாய் வீட்டைக் காக்கிறது.
5. சிறுமி துணி தைக்கிறாள்.

| மனிதர் களின் பெயர் | விலங்கு களின் பெயர் | பறவை களின் பெயர் | பொருள் களின் பெயர் | இடங் களின் பெயர் |
|---|---|---|---|---|
| | | | | |

# 11. போலீஸ்காரர்



| | | |
|---|---|---|
| காப்பாளர் | ஏற்படும் | மோதிக்கொள்ளும் |
| சரியாக | விதி | சாலை |
| பழுது | பின்பற்றி | இனிமேல் |

**முருகன் :** மாமா, இதோ நிற்கும் இவர் யார்?

**மாமன் :** முருகா, இவர் போலீஸ்காரர். இவர் காப்பாளர் எனவும் அழைக்கப் படுவார்.

**முருகன் :** இவர் ஏன் இங்கு நிற்கிருர்?

மாமன் : இவர் இந்தச் சாலையில் வரும் வண்டிகளையும், போகும் வண்டிகளையும் ஒழுங்காகப் போகும்படியும், வரும்படியும் செய்வார். அதோ பார், ஒரு மோட்டார் வருகிறது. அது இவருக்கு எதிரே இருந்து வருகிறது. இவருக்கு வலப்புறம் இருந்து மற்றொரு மோட்டார் வருகிறது. இவர் இந்த மோட்டாரை நிறுத்த, தமது வலக்கையை நீட்டுகிறார். இந்த மோட்டார் நின்றுவிட்டது. உடனே அந்த மோட்டார் தடை இல்லாமல் போக வழி உண்டாகிறது. இவர் அது போனவுடன் இதைப் போகச் செய்வார்.

முருகன் : அவர் இங்கு இல்லா விட்டால் வண்டிகள் சரியாகப் போகாதோ?

மாமன் : ஆம், சில வேளைகளில் சரியாகப்போகும். சில வேளைகளில் ஒன்றோடொன்று மோதிக்கொள்ளும். அதனால், இரண்டு வண்டிகளும் பழுது படும். அதோடு, வண்டிகளில் இருப்பவர்க்கும் கெடுதி ஏற்படும். இக் கெடுதிகளை நீக்கவே இவர் இங்கு இருக்கிறார்.

முருகன் : இவர் மக்களையும் இப்படி நிற்கச் செய்வாரோ?

**மாமன் : இல்லே இல்லே. நாம் சாலேயின் இடது புறம் போகவேண்டும். நம் எதிரில் வருபவர் நமக்கு வலது புறம் வரவேண்டும். இந்த விதியைப் பின் பற்றி நடப்பவர்க்குக் கெடுதி வராது.**

**முருகன் : அப்படியா ! சரி, நான் இனிமேல் பள்ளிக்கூடம் போகும் போது சாலேயில் இடப்புறமே போவேன்; வரும் போதும் இடப்புறமே வருவேன். வலப்புறம் போக மாட்டேன்.**

எதிர்ப் பதங்கள்: வலப்புறம் × இடப்புறம்
வலதுபுறம் × இடதுபுறம்
போவேன் × வருவேன்

### கேள்விகள்

1. போலீஸ்காரர் என்ன செய்கிறுர் ?
2. அவர் சாலேகள் கூடும் இடத்தில் இராவிடில் என்ன நேரும் ?
3. நீ சாலேயில் எப்பக்கம் போகவேண்டும் ? எப்பக்கம் வரவேண்டும் ?

### பயிற்சி

1. காப்பாளரைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது.

2. சாலையைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

3. வலப்புறம், பின்பற்றி, விதி, கெடுதி—ஒவ்வொன்றையும் தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

4. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்து எழுது.

1. நீ சாலையின்———போகவேண்டும்.

2. நீ சாலையின்———வரவேண்டும்.

3. காப்பாளர்——சாலையில்—உண்டாகும்.

4. ——கையை——வண்டி——

---

# 12. பருத்திக் கதை

| | | |
|---|---|---|
| பருத்தி | அடித்துஅடித்து | சின்னபின்னமாக |
| மடி | துண்டுதுண்டாக | வெளுத்து |
| கோணிப்பை | வேகவைப்பான் | சுடச்சுட |
| உடன் பிறந்த | காயவைப்பான் | தேய்ப்பான் |
| தறி | கத்தரிக்கோல் | படும்பாடு |



1. குழந்தாய், என் கதையைக் கேள். நான் பருத்திச்செடியில் இருந்து பிறந்தேன். காட்டுக்காரர் என்னை எடுத்து மடியில் போட்டனர்; பிறகு கோணிப் பையில் அடைத்தனர். என்னை வணிகனுக்கு விற்றனர். வணிகன் என் உடன் பிறந்த கொட்டையைப் பிரித்தான்; என்னைத் தனியே விட்டான்.





2. நான் வணிகனிடம் சில நாள் இருந்தேன். பிறகு நூல் நூற்பவர் அங்கு வந்தார். அவர் என்னை வாங்கிக்கொண்டு போனார்.

அவர் என்னை நூலாக நூற்ருர். அதனுல், நான் நூலாக மாறினேன்.



3. பின்பு துணி நெய்பவர் என்னை வாங்கிச் சென்ருர். அவர் என்னைத் தறியில் இட்டார்; என்னை அடித்து அடித்து நெய்தார். நான் துணியாக மாறினேன். அவர் என்னைக் கத்தியால் அறுத்துத் துணிக் கடைக்காரர்க்கு விற்ருர்.

4. கடைக்காரர் என்னைச் சிலநாள் அன்பாக வைத்திருந்தார். பிறகு, அவர் என்னைத் துண்டுதுண்டாக வெட்டிப் பலருக்கு விற்ருர்.



5. நான் முருகனது வேட்டி ஆனேன். அவன் என்னைப் படுத்திய பாடு சொல்லி முடியாது. அவன் தினமும் என்னைக் கல்லின் மீது அடிப்பான். முருகனுடைய



வண்ணுன் வாரத்துக்கு ஒரு முறை என்னை வேக வைப்பான்; கல்லின் மீது அடிப்பான்; வெயிலில் காய வைப்பான்.

6. குமரன் என்னைச் சட்டை தைக்கத் தையல் காரனிடம் கொடுத்தான். தையல்காரன் என்னைக் கத்தரிக்கோலால் சின்ன பின்னமாகக் கத்தரித்து, ஊசியால் குத்திச் சட்டை யாகத் தைத்தான்.



7. குமரனுடைய வண்ணான் என்னை வேகவைத்து வெளுத்து, ஒரு பலகை மீது போடுவான்; ஒரு பெட்டிக்குள் நெருப்பைப் போட்டுச் சுடச் சுட என்மீது தேய்ப்பான். அப் போது நான் படும்பாடு சொல்லவுங் கூடுமோ!



8. தம்பீ! என்மீது உனக்கு இரக்கம் உண்டாகிறதா, இல்லையா?

### கேள்விகள்

1. பருத்தியின் கதை யாது?

2. அது வேட்டியானபின் என்ன பாடு பட்டது?

3. வண்ணான் சட்டையை என்ன பாடு படுத்தினான்?

4. பருத்தியின் பயன் என்ன?

### பயிற்சி

1. நெய்பவரும் நூலும்—என்பதுபற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

2. தையல்காரனும் துணியும்—என்பது பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

3. வண்ணானும் சட்டையும்—என்பது பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

4. கோடிட்ட இடங்களை நிரப்பு:

   1. ——முருகனது——ஆனேன்.
   2. ——குத்திச்——தைப்பான்.
   3. வண்ணான்—கல்லின்—அடிப்பான்.
   4. இக்கதையி லிருந்து பத்துப் பெயர்ச் சொற்கள் எடுத்து எழுதுக.

# 13. ஆமையும் முயலும்

| | | |
|---|---|---|
| பந்தயம் | தூரம் | திடீரென |
| தோற்கடிப்பேன் | பாய்ந்து பாய்ந்து | விழித்தது |
| முடிவில் | பாதி | பயன் |
| தலைப்பட்டன | முன்பு | வெட்கம் |
| பொது ஆள் | மெள்ள மெள்ள | குறித்த |

குறிப்பு : இக்கதையைப் பிள்ளைகளைக் கொண்டு நாடகமாக நடித்துக் காட்டுக.

1. முயல் வேகமாய் ஓடுவது. ஆமை மெதுவாய் ஓடுவது. ஒருநாள் முயலும் ஆமையும் சந்தித்தன. முயல், "நான்தான் வேகமாய் ஓடுவேன்" என்றது. ஆமை "நான் உன்னைத் தோற்கடிப்பேன்" என்றது.

2. முடிவில் இரண்டும் ஓட்டப் பந்தயம் நடத்தத் தீர்மானித்தன. இரண்டும் நரியைப் பொது ஆளாக வைத்துக் கொண்டன. இரண்டும் போய்ச் சேர வேண்டிய இடம் தூரத்தில் இருந்தது. அந்த இடத்தில் நரி உட்கார்ந்திருந்தது.

3. முயலும் ஆமையும் ஓடத் தலைப் பட்டன. முயல் பாய்ந்து பாய்ந்து ஓடியது. பாதித்தூரம் போனதும் முயல் திரும்பிப்

பார்த்தது. ஆமை காணப்படவில்லை. முயல் சற்று நேரம் இளைப்பாற எண்ணியது. அது அந்த இடத்திலேயே படுத்துத் தூங்கி விட்டது.

4. ஆமை மெள்ளமெள்ள நகர்ந்து சென்றது. அது, வழியில் தூங்கிக்கொண்டு இருந்த முயலைக் கண்டது. அது அங்கே நிற்கவில்லை. அது மெதுவாகவே போய்க் கொண்டு இருந்தது. முயல் நன்ருய்த் தூங்கிவிட்டது.



5. முடிவில், ஆமை குறித்த இடத்தை அடைந்து விட்டது. முயல் திடீரென விழித்தது. அது உடனே ஓடிவந்தது. வந்து பயன் என்ன ? அது தனக்கு முன்பே ஆமை குறித்த இடத்தை அடைந்து விட்டதைக் கண்டது. அது மிகவும் வெட்கப் பட்டது.

**கேள்விகள்**

1. முயலும், ஆமையும் என்ன பேசிக்கொண்டன?
2. முயல் ஏன் வழியில் தூங்கியது ?
3. ஆமை எப்படி வெற்றி அடைந்தது ?
4. இப்பாடத்தால் நீ என்ன அறிகிருய் ?

## பயிற்சி

1. முயலின் செருக்கு - என்பதுபற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.
2. ஆமையின் அடக்கம் — என்பதுபற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.
3. ஓட்டப் பந்தயம் என்பதைபற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.
4. பாய்ந்து பாய்ந்து, மெள்ள மெள்ள. திடீரென, பொது ஆள் - ஒவ்வொன்றையும் தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.
5. கோடிட்ட இடங்களை நிரப்பு :
   (1) முயல்——ஓடும்.
   (2) ——மெதுவாய்——
   (3) ——நன்ருய்——விட்டது.
   (4) ஆமை——இடத்தை——விட்டது.

# 14. தமிழ் நாடு—பாட்டு




| | | |
|---|---|---|
| ஓங்கி | சிற்றரசர் | நிலவுதல் |
| தீந்தமிழ் | பாதுகாவல் | ஆந்திரம் |
| தென்னாடு | புலவர் | கன்னடம் |
| பன்னலம் | தெள்ளுதமிழ் | மலையாளம் |
| பைந்தமிழ் | சங்கநூல்கள் | இலகுதமிழ் |
| சேரசோழபாண்டியர் | திகழுதல் | கன்னித்தமிழ் |

1. தென்னைபனை ஓங்கிவளர்
தீந்தமித்தென் னாடு,
பன்னலமும் பொருந்தியொளிர்
பைந்தமிழ்நன் னாடு.

2. சேரசோழ பாண்டியர்கள்
ஆண்டதமிழ் நாடு,
சிற்றரசர் பாதுகாவல்
பூண்டதமிழ் நாடு.

3. வள்ளல்களும் புலவர்களும்
வளர்த்ததமிழ் நாடு,
தெள்ளுதமிழ்ச் சங்கநூல்கள்
திகழுந்தமிழ் நாடு.

4. பலமலையும் பல்லாறும்
பயனுதவும் நாடு,
நிலவளமும் குடிவளமும்
நிலவுதமிழ் நாடு.

5. ஆந்திரங்கன் னடம்வடக்கில்
மேற்கில்மலை யாளம்,
அலைகடல்மற் றிருபுறமும்
இலகுதமிழ் நாடு.

6. கப்பலோட்டி வாணிகஞ்செய்
கன்னித்தமிழ் நாடு,
எப்பொருளும் குறைவிலாத
எங்கள் தமிழ் நாடு.

7. ஏர்த்தொழிலும் கைத்தொழிலும்
ஏற்றமுள்ள நாடு,
எத்திசையும் புகழ்மணக்கும்
எங்கள்தமிழ் நாடே.

---

### பயிற்சி 5

எதிர்ப் பக்கத்தில் உள்ள படத்தைப் பார்த்துக் கீழ்க் கண்ட கேள்விகளுக்குப் பதில் சொல்.

படம் 1. பையன் எங்கிருந்து எங்கு போகிறுன் ?

படம் 2. பையன் வழியில் எதை சந்திக்கிருன் ?

படம் 3. பையன் என்ன செய்கிருன் ?

படம் 4. வண்டி என்ன செய்கிறது ?

படம் 5. பையன் என்ன ஆனுன் ?

படம் 6. அவனுக்கு என்ன உண்டானது ?

7. மற்றொரு பையன் என்ன செய்கிருன் ?

8. இக்கதையில் இருந்து நீ என்ன தெரிந்து கொண்டாய் ?

9. இந்தக் கதைக்கு நீயே சரியான தலைப்பு எழுது.

## பயிற்சி 6

பதினாலாவது பாடத்தில் நாலாவது பத்தியில் எத்தனை வாக்கியங்கள் இருக்கின்றன ? வாக்கியம் முடியும் இடத்தில் என்ன அடையாளம் இருக்கிறது? வாக்கியத்தின் முடிவில் இட்டிருக்கும் புள்ளி வாக்கியம் முடிந்து விட்டது என்பதைக் காட்டு கிறது. இதற்கு முற்றுப்புள்ளி என்று பெயர்.

முற்றுப்புள்ளி இடவேண்டிய இடங்களில் முற்றுப் புள்ளி இடு.

நான் ஒரு கோழி வளர்க்கிறேன் அது நல்ல கோழி அழகான கோழி நான் அதற்குத் தீனி போடு வேன் அது தீனி தின்னும் அது பெட்டைக் கோழி அது முட்டை இட்டது முட்டை வெண்மை நிறம் உடையது முட்டை குஞ்சு பொரிக்கும் குஞ்சு அழ காய் இருக்கும்

# 15. ஆறு




| | | |
|---|---|---|
| கடக்க | குறுக்கே | அணை |
| உயரம் | பாலம் | வாய்க்கால் |
| பெய்யும் | பயன் | கடல் |

முருகன் : தந்தையே, இந்த ஆறு எங்கிருந்து வருகிறது ?

**தந்தை :** குழந்தாய், இது மலையிலிருந்து வருகிறது.

முருகன்: இது மலையிலிருந்தா வருகிறது?

**தந்தை :** ஆமாம். மலை உயரமாகஇருப்பதால், மலையின் மீது பெய்யும் மழை நீர் ஆருக ஓடி வருகிறது.

முருகன் : தண்ணீர் அதிகமாக வரும் பொழுது ஆற்றைக் கடக்க முடியாதோ ?

தந்தை : முடியும். அதோ ஆற்றின் குறுக்கே பாலம் இருக்கிறது பார்; அதன் மீது நடந்து செல்லலாம். பாலத்தின் மீது வண்டிகளும் போகும்.

முருகன் : இந்த ஆற்று நீர் முடிவில் எங்கே போகிறது ?

தந்தை : ஆற்று நீர் முடிவில் கடலில் கலக்கிறது.

முருகன் : ஆற்று நீர் கடலில் கலப்பதால் நமக்கு என்ன பயன் ?

தந்தை : ஆற்று நீர் முழுவதும் கடலில் கலப்பதில்லை. ஆற்றில் அணை கட்டப்பட்டு இருக்கும். அணையிலிருந்து வாய்க்கால் வழியாய்த் தண்ணீர் வயல்களுக்குப் பாயும். வயல் களுக்குப் பாய்ந்தது போக, மிகுந்த நீரே கடலை அடையும். ஆற்று நீரால்தான் நமது நாட்டில் நெல் மிகுதியாக விளைகிறது.

முருகன் : அப்படியா !

தந்தை : ஆம், ஆற்று நீரால் நெல் விளைகிறது. நெல் நமக்கு உணவு ஆகிறது. ஆறு நமக்குச் சோறு போடுகிறது.

எதிர்ப் பதங்கள்: உயர்வு × தாழ்வு
அதிகம் × குறைவு

## கேள்விகள்

1. ஆறு எங்கிருந்து வருகிறது ?
2. ஆற்றினால் பயன் என்ன ?
3. ஆற்றினால் நாம் வாழ்வது எப்படி ?
4. அணையின் பயன் யாது ?

## பயிற்சி

1. ஆற்றைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.
2. வாய்க்காலைப்பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.
3. அணையைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.
4. வயலைப்பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.
5. பயன், அணை, முழுவதும், கடல்-தனித்தனி வாக்கியத்தில் எழுது.
6. கோடிட்ட இடங்களில் ஏற்ற சொற்களை அமைத்து எழுது:
   (அ) மழை நீர்——ஓடி——.
   (ஆ) பாலத்தின் மீது——செல்லலாம்.
   (இ) ——அணை——இருக்கும்.
   (ஈ) நெல்——உணவு——.

## 16. நாயின் நன்றி

| | | |
|---|---|---|
| பாகன் | தாண்டியது | குத்துக்கோல் |
| அன்பாக | தடவி | வெகுண்டு |
| வேளை | விருப்பம் | மிதித்து |
| தீனி | மறுத்தது | |

1. ஓர் ஊரில் யானைப் பாகன் ஒருவன் இருந்தான். அவன் யானையை அன்பாக வளர்த்து வந்தான்; அதற்கு வேளைக்கு வேளை தீனி போடுவான்; ஆற்றுக்குக் கொண்டு போய்க் குளிப்பாட்டுவான். யானையும் அவனிடம் அன்பாகவே நடந்து வந்தது.

2. அப்பாகன் ஒரு நாயும் வளர்த்து வந்தான். அதையும் அவன் அன்பாகவே வளர்த்து வந்தான். நாயும் அவனிடம் அன்பாகவே நடந்து கொண்டது. அது வாலை ஆட்டித் தன் தலைவனிடம் தனக்குள்ள அன்பைக் காட்டிக் கொள்ளும்.

3. ஒரு நாள் அப்பாகன் வெளியே சென்று விட்டு வந்தான். நாய் அன்பினால் அவன் மீது தாண்டியது. அதன் கால்கள் பட்டு உடை அழுக்கானது. அதனால் அவன் கோபம் கொண்டான்; தடியால் நாயை அடித்தான். அது அடியை வாங்கிக்

கொண்டே, வாலை ஆட்டித் தன் அன்பைக் காட்டிக் கொண்டது. பாகன் நாயின் நன்றியைக் கண்டு மகிழ்ந்தான்; அதை அன்போடு தடவிக் கொடுத்தான்.



4. மற்றொரு நாள் பாகன் யானையை ஆற்றுக்குக் குளிப்பாட்டக் கொண்டு போனான். வழியில் ஒரு கரும்பு வண்டி வந்தது. யானைக்கு கரும்பென்றால் விருப்பம் அல்லவா? அது கையினால் வண்டியில் உள்ள கரும்பைப் பிடித்து இழுத்தது. அதை விட்டு விட்டு வரும்படி பாகன் அதட்டினான். யானை வர மறுத்தது. அவன் குத்துக்கோலால் அதைக் குத்தினான். யானை வெகுண்டு, அவனைப் பிடித்துக் காலால் மிதித்துக் கொன்றது.



**5. பார்த்தீர்களா, நாய்க்கும் யானைக்கும் உள்ள நன்றியறிதலை? நாயின் நன்றியே நன்றி! யானை போன்றவர் நட்பை விட்டு நாய் போன்றவர் நட்பைக் கொள்ள வேண்டும் என்பது இக்கதையால் விளங்குகிற தல்லவா ?**

### கேள்விகள்

1. பாகன் யானையை எவ்வாறு வளர்த்து வந்தான் ?
2. பாகன் நாயை ஏன் அடித்தான்? அது என்ன செய்தது ?
3. யானை பாகனை ஏன் கொன்றது ?
4. இக்கதையால் விளங்கும் நீதி யாது ?

### பயிற்சி

1. யானையைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

2. நாயைப்பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

3. பாகன் இறந்ததைப்பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

4. அன்பாக, வேளைக்கு வேளை, அழுக்கானது ஒவ்வொன்றையும் தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுதுக.

5. கோடிட்ட இடங்களில் தகுந்த சொற்களை அமைத்து எழுது.

1. ——வேளைக்கு வேளை——போடுவான்.
2. நாயும்——அன்பாக——கொண்டது.
3. ஒரு——வண்டி——.

——

# 17. கூடை முடைதல்

| | | |
|---|---|---|
| சிம்புகள் | விற்பனை | பிளந்து |
| மெல்லியவை | அவசியம் | மற்றொருவர் |
| பச்சை | முன்னரே | சீவுதல் |
| நல்லவேலை | எடுக்க | பெரியகூடை |
| முடைந்து | வைக்க | மண் கூடை |
| ஏராளமாக | தூக்குக் கூடை | குடிசைத் தொழில் |

1. கூடை, காய்கறி வாங்கி வைக்க உதவும். கூடை, மண் எடுக்கப் பயன்படும். கூடை, அரிசி முதலியவை வைக்க உதவும்.



கூடை, பல வேலைகளுக்குப் பயன்படுகிறது. முறம் புடைக்க உதவும். தூக்குக் கூடைகாய் கறி வாங்க உதவும்.

2. கூடையும் முறமும் எதனுல் செய்யப் படுகின்றன? மூங்கிலால்செய்யப்படுகின்றன. படத்தைப் பாருங்கள். ஒருவர் மூங்கி லைச் சிறிய சிம்புகளாகப் பிளந்து போடு கிருர். மற்ருெருவர் அவற்றை மெல்லியதாகச் சீவுகிருர். பச்சை மூங்கிலே சீவப் பயன் படும்.

3. படத்தில் உள்ள பெண்களைப் பாருங்கள். அவர்கள் மெல்லிய சிம்புகளைக் கூடையாக முடைகிருர்கள். அவர்கள் முடைந்து வைத்துள்ள தூக்குக் கூடை, முறம், பெரியகூடை, சிறிய கூடை, மண் கூடை முதலியவற்றைப் பாருங்கள்.

4. முடைதல் தொழில் நல்ல தொழில். இது ஒரு குடிசைத் தொழில் ஆகும். இத் தொழிலால் பலர் பிழைக்கின்றனர். கூடை, முறம் இல்லாத வீடு உண்டா? கூடை முறங் கள் ஏராளமாக விற்பனை ஆகின்றன. இது போன்ற தொழில் ஒன்றை நீங்கள் தெரிந்து கொள்ளுதல் நல்லது.

எதிர்ப்பதம் : மெல்லிய + தடித்த. சிறிய + பெரிய.

**கேள்விகள்**

1. படத்தில் உள்ள ஆண்கள் என்ன செய்கின் றனர் ?

2. படத்தில் உள்ள பெண்கள் என்ன செய்கின் றனர் ?

3. முடைதல் தொழில் எங்ஙனம் நல்ல தொழில்?

4. இத்தொழிலுக்கு வேண்டிய பொருள் யாது ?

5. மூங்கிலால் வேறு என்னென்ன பொருள்கள் செய்யலாம் ?

## பயிற்சி

1. நீ பார்த்த கூடைக் கடை ஒன்றைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது.

2. நீ பார்த்துள்ள கூடைகள் எவை? அவற்றைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; பிறகு அவற்றை எழுது ?

3. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்து எழுது:

1. முடைதல்——நல்ல——.
2. ——இல்லாத——உண்டா ?
3. பச்சை—— சிவப்——.
4. ——உள்ள——பாருங்கள்.

4. முடைதல், ஏராளம், விற்பனை-ஒவ்வொன்றையும் தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

5. உதவும்— இதே பொருளைத் தரும் இரண்டு சொற்கள் சொல்; அவற்றை வாக்கியங்களில் அமைத்து எழுது.

# 18. எங்கள் ஊர்

| | | |
|---|---|---|
| எழுநூறு | மின்சாரம் | காப்பகம் |
| ஓட்டுவீடு | மருத்துவசாலை | பூங்கா |
| கூரைவீடு | மருத்துவர் | வானொலி |
| மாடிவீடு | மருத்துவச்சி | நிலையம் |
| ஊர்மன்றம் | அஞ்சலகம் | உயர்நிலைப்பள்ளி |



1. எங்கள் ஊர் அழகான ஊர். எங்கள் ஊரில் சுமார் எழுநூறு வீடுகள் இருக்கும். அவற்றுள் பல ஓட்டு வீடுகள்; சில கூரை வீடுகள்; ஒரு சில மாடி வீடுகளும் உண்டு. எங்கள் ஊர்த் தெருக்கள் சிறியவை; ஆனால் ஒழுங்காக இருக்கும்.

2. எங்கள் ஊரில் ஊர்மன்றம் இருக்கிறது. ஊர் மன்றத்தார் எங்கள் ஊர்த் தெருக்களில் மின்சார விளக்குப் போட்டு இருக்கிறார்கள்; தெருக் கூட்ட ஆள் ஏற் படுத்தி இருக்கிறார்கள். தெருக் கூட்டுவோர் தினமும் அதிகாலையில் தெருக்களைக் கூட்டித் துப்புரவு செய்வார்கள்.

3. எங்கள் ஊரில் ஒரு மருத்துவ சாலை இருக்கிறது. அதில் ஒரு மருத்துவரும் ஒரு மருத்துவச்சியும் இருக்கிறார்கள். எங்கள் ஊரில் அஞ்சலகம் இருக்கிறது. எங்கள் வீட்டுக்கு வரும் கடிதங்களை அஞ்சல்காரன் கொண்டுவந்து கொடுப்பான். எங்கள் ஊரில் காப்பகமும் (போலீஸ் ஸ்டேஷன்) உண்டு.

4. எங்கள் ஊரில் அழகான பூங்கா இருக்கிறது. அதில் வானொலி நிலையம் இருக்கிறது. ஊர் மக்கள் அங்குச் சென்று வானொலி கேட்டு மகிழ்வார்கள். எங்கள் வீட்டில் வானொலிப் பெட்டி இருக்கிறது. நான் அதில் பாட்டும் செய்தியும் கேட்பேன்.

5. எங்கள் ஊரில் ஒரு தொடக்கப் பள்ளியும், ஓர் உயர்நிலைப் பள்ளியும் இருக் கின்றன. சுற்றுப் புற ஊர்ப் பிள்ளைகள்

வந்து எங்களூர் உயர்நிலைப் பள்ளியில் படிக்கிறார்கள். நான் தொடக்கப் பள்ளியில் படிக்கிறேன். என் அண்ணனும் அக்காளும் உயர் நிலைப் பள்ளியில் படிக்கிறார்கள்.

6. எங்கள் ஊரில் மளிகைக் கடை, சில்லறைக்கடை, துணிக்கடை, பலகாரக் கடை, புத்தகக்கடை முதலிய எல்லாக் கடைகளும் உள்ளன. எங்கள் ஊரின் வழியாய் வாடகை மோட்டார் வண்டி போகிறது.

7. எங்கள் ஊரினரில் பெரும்பாலோர் உழவர்கள். சிலர் நெசவு நெய்கிறார்கள். தச்சர், கொல்லர் முதலிய தொழிலாளர்களும் இருக்கிறார்கள். நாங்கள் எல்லோரும் ஒற்றுமையாக இருக்கிறோம்.

### கேள்விகள்

1. ஊர் மன்றத்தாரின் வேலைகள் யாவை?
2. உங்களூர் மருத்துவ சாலையில் இருப்பவர் யாவர்?
3. உங்களூரில் வேறு என்னென்ன உள்ளன?
4. உங்கள் ஊரில் என்னென்ன கடைகள் இருக்கின்றன?
5. உங்கள் ஊரில் என்னென்ன தொழில்கள் நடைபெறுகின்றன?

### பயிற்சி

1. ஊர் மன்றம் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

2. பள்ளிகள் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

3. தெருக்கள், அஞ்சல்காரன், பூங்கா, வானொலி—தனித்தனி வாக்கியத்தில் எழுது.

4. கோடிட்ட இடங்களை நிரப்பு :

1. எங்கள்————ஊர் மன்றம்————
2. கடிதங்களை————கொண்டுவந்து ——
3. ————தொடக்கப்————படிக்கிறேன்.
4. நாங்கள்————ஒற்றுமையாக————.

———

# 19. உழவுத்தொழில் பாட்டு

| | | |
|---|---|---|
| மாரி | கார் | மன்னர் |
| செஞ்சாலி | களம் | வளநாடு |
| செழிக்கும் | பள்ளர் | வேளாளர் |
| அறுப்பார் | போர் | வாரி |

1. மாதமும் மாரிபெய்யும்
மன்னர் திருநாடு.

2. செஞ்சாலி நெல்விளைந்தே
செழிக்கும் வளநாடு.

3. நாற்றைப் பிடுங்கிப் பள்ளர்
நன்ருய் நடுவார்கள்.

4. சேற்றைக் குழப்பிப் பள்ளர்
சீராய் நடுவார்கள்.

5. வயலில் களைபிடுங்கி
வாரி எறிவார்கள்.

6. கார்நெல் அறுப்பார்கள்,
களத்தில் அடிப்பார்கள்.

7. கார் கார்நெல் அளப்பார்கள்,
களிப்பொடு வாழ்வார்கள்.

8. போரடித்து நெற்குவித்துப்
பொங்கல் இடுவார்கள்.

9. ஏரடித்து வேளாளர்
இன்பமாய் வாழ்வார்கள்.

—நல்ல தங்காள் கதை

## பயிற்சி 7

கோடிட்ட இடங்களில் சரியான சொற்களை அமைத்துப் படி.

ஒரு நாள் ———— வெளியே ———— விட்டு ————. ———— அவன் ———— தாண்டியது. ————அவன் ———— கொண்டான். ———— நாயை ————. அது ———— வாங்கிக் ———— வாலை———— தன்———— காட்டிக்————. பாகன் ———— நன்றியைக்———— மகிழ்ந்தான்;———— அன்போடு————கொடுத்தான்.

13-ஆம் பாடத்தில் வந்துள்ள ஐந்து பெயர்ச் சொற்களை எடுத்தெழுது.

## பயிற்சி 8

நாய் என்ன செய்தது ?—தாண்டியது.
பாகன் என்ன செய்தான் ?—அடித்தான்.

தாண்டியது—என்ற சொல் நாய் செய்த தொழிலைக் குறிக்கிறது.

அடித்தான்—என்ற சொல் பாகன் செய்த தொழிலைக் குறிக்கிறது.

இவ்வாறு தொழில் அல்லது செயலைக்குறிக்கும் சொல்லுக்கு **வினைச்சொல்** என்று பெயர்.

கீழ்வரும் வாக்கியங்களில் உள்ள வினைச் சொற்களைக் குறிப்பிடுக.

காகம் பறக்கிறது. காற்று வீசுகிறது.
நாய் ஓடுகிறது. மழை பெய்கிறது.

17-ஆம் பாடத்திலிருந்து பத்து வினைச்சொற் கள்எடுத்து எழுது.

## 20. சுடும் பழமா? சுடாப்பழமா?

| | | |
|---|---|---|
| நாவல்மரம் | பசி | மணல் |
| கருமை | சுடும் பழம் | ஊதினுள் |
| சுடாப் பழம் | சிரித்தான் | வேண்டும் |
| அறிவு | விளங்கவில்லை | வாழ்த்தி |

குறிப்பு: இக்கதையைப் பிள்ளைகளைக் கொண்டு நாடகமாக நடித்துக் காட்டுக.

1. படத்தைப் பாருங்கள். படத்தில் இருப்பது நாவல் மரம். இது நாகமரம் எனவும் வழங்கும். பழம் கருமையாக இருக்கும். ஒரு சிறுவன் பழம் பறித்துப் போடுகிறுன். மரத்தின் கீழே பாட்டி ஒருத்தி பழம் தின்கிறுள். அவள் அங்குப் பசியோடு வந்தாள்



2. பாட்டி, பையனைப் பார்த்து, ‘‘பிள்ளாய், சில பழங்கள் பறித்துப் போடு; எனக்குப் பசி அதிகமாக இருக்கிறது’’ என்றுள்.

3. பையன் "பாட்டி, சுடும் பழம் வேண்டுமா? சுடாப் பழம் வேண்டுமா? எது வேண்டும் சொல்; பறித்துப் போடு கிறேன்" என்ருன்.

4. பாட்டிக்கு ஒன்றும் விளங்கவில்லை. "சுடும் பழம் எது? சுடாப் பழம் எது? பழம் சுடுமோ? சிறுவன் பேச்சு வேடிக்கை யாக வன்ருே இருக்கிறது? சரி அவனை ஏன் கேட்கவேண்டும்?" என்று பாட்டி தனக்குள் எண்ணினுள். அவள், ,' அப்பா, சுடும் பழமே போடு" என்ருள்.

5. சிறுவன் கனிந்த பழங்களைப் பறித் துப் போட்டான். பழத்தில் மணல் ஒட்டிக் கொண்டது. பாட்டி பழத்தை எடுத்து மணலை ஊதினுள். சிறுவன் சிரித்தான். "பாட்டி, ஏன் ஊதுகிருய்? பழம் சுடு கிறதா?" என்ருன்.

6. பாட்டி வியப்புற்ருள்; சிறுவனு டைய அறிவைப் பாராட்டினுள். அவள் அவனை வாயார வாழ்த்திச் சென்ருள்.

**எதிர்ப்பதங்கள்**

சிறுவன் × சிறுமி

சுடும் பழம் × சுடாப் பழம்

### கேள்விகள்

1. பையன் பாட்டியைக் கேட்ட கேள்வி யாது ?

2. பாட்டி என்ன சொன்னுள் ?

3. சுடும் பழம் எது ? சுடாப் பழம் எது ?

4. பையனைப் பற்றி நீ என்ன நினைக்கிருய் ?

### பயிற்சி

1. பாட்டியைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல். அவற்றை எழுது.

2. பையனைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

3. அதிகமாக, விளங்கவில்லை, கனிந்த— தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

4. கோடிட்ட இடங்களை நிரப்பு :

1. ———பழம்———பழம்.
2. மரத்தின் கீழே———ஒருத்தி———.
3. பாட்டி———அறிவைப் ———.

## 20. உடற் பயிற்சி

| | | |
|---|---|---|
| தண்டால் | கால்பந்து | போட்டி |
| உடற்பயிற்சி | மூச்சு | பந்தயம் |
| அளிப்பது | மூச்சுப்பை | வியர்வை |
| உரம் | தூய்மை | உடல் நலம் |

1. இந்தப் படத்தில் உள்ள பிள்ளைகள் என்ன செய்கிறார்கள்? இவர்கள் தண்டால் எடுக்கிறார்கள். தண்டால் எடுப்பது சிறந்த உடற்பயிற்சி ஆகும். இது கை, கால்,



இடுப்பு, மார்பு, கழுத்து இவற்றிற்கு நல்ல பயிற்சி அளிப்பது ஆகும். இவ் வுறுப்புக்கள்



வலு அடையும். நீ தினந்தோறும் தவறாமல் தண்டால் எடு. உன் உடல் உரம் பெறும்.

2. இங்கே பிள்ளைகள் பந்து விளையாடு கிறார்கள். இவர்கள் பந்தைக் காலால் உதைத்து விளையாடுகிறார்கள். இது கால் பந்து ஆட்டம் எனப்படும். இவர்கள் ஓடி ஆடி விளையாடுவதைப் பார். இவர்கள் ஓடி யாடி விளையாடுவதால் அதிகமாக மூச்சு வாங்கி விடுகிறார்கள். இதனால் மார்பு அகல மாகிறது. மூச்சுப்பை விரிந்து சுருங்குகிறது. இதனால் இரத்தம் தூய்மை அடைகிறது. ஓடுவதால் கால்கள் வலுப்பெறும். இந்த விளையாட்டால் எல்லா உறுப்புக்களும் உரம் பெறும்.

3. இங்கு பிள்ளைகள் ஓடுவதைப் பார். இவர்கள் போட்டி போட்டுக்கொண்டு ஓடு கிறார்கள். இதற்கு ஓட்டப் பந்தயம் என்று



பெயர். இவர்கள் விரைவாக ஓடுவதால் அதிகமாக மூச்சு விடுகிறார்கள். உடம்பில் உள்ள கெட்ட இரத்தம் எல்லாம் வியர்வை

யாக வெளிப்படுகிறது. இரத்தம் தூய்மை அடைகிறது; தூய இரத்தம் உடம்புக்கு நல்லது; உடல் உரம் பெறும்.

4. தம்பீ, நீ தினமும் உடற்பயிற்சி செய்; ஓடியாடி விளையாடு; உடல் நலத்துடன் இரு; சோம்பலாக இராதே.

### கேள்விகள்

1. தண்டால் என்பது என்ன? அதனுல் என்ன பயன்?
2. பந்தாட்டத்தால் என்ன நன்மை?
3. ஓடுவதால் என்ன நன்மை?
4. ஏன் தினந்தோறும் உடற்பயிற்சி செய்ய வேண்டும்?

### பயிற்சி

1. இங்குக் கூறப்பட்ட விளையாட்டுக்களில் உனக்கு விருப்பமானது எது ? அதைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

2. உன் பள்ளியில் நடைபெறும் விளையாட்டுக்கள் யாவை? அவற்றைப் பற்றி மூன்று வாக்கியங்கள் சொல்; அவற்றை எழுது.

3. பயிற்சி, தண்டால், ஓட்டப் பந்தயம்—தனித்தனி வாக்கியத்தில் அமைத்து எழுது.

4. கோடிட்ட இடங்களை நிரப்பு:
   1. இவர்கள்——எடுக்கிறுர்கள்.
   2. ——கால்கள்——பெறும்.
   3. தூய——உடம்புக்கு——.

5. இப்பாடத்திலிருந்து ஐந்து பெயர்ச்சொற்களும் ஐந்து வினைச்சொற்களும் எடுத்து எழுது.

## பயிற்சி 9

குறிப்பு: கீழே யுள்ள படங்களைப் பார்த்துக் கதை எழுது. அக்கதைக்கு உன் விருப்பம் போல் பெயர் கொடு.


















## பயிற்சி 10

முட்டை குஞ்சு பொரிக்கும். குஞ்சுகள் பெரியவை ஆனதும் அவற்றை விற்பேன்.

இந்த வாக்கியங்களில் வந்துள்ள பெயர்ச் சொற்கள் எவை ?

குஞ்சு-இந்த பெயர்ச்சொல் ஒரு பொருளைக் குறிக்கிறது.

குஞ்சுகள்-இந்தப் பெயர்ச்சொல் பல பொருளைக் (ஒன்றுக்கு அதிகமான) குறிக்கிறது.

ஒரு பொருளைக் குறிக்கும் பெயர்சொல் ஒருமைப் பெயர் எனப்படும். பல பொருளைக் குறிக்கும் பெயர்ச்சொல் பன்மைப் பெயர் எனப்படும்.

நீ படித்த பாடங்களில் வந்துள்ள ஒருமைப் பெயர் ஐந்து பன்மைப் பெயர் ஐந்து எடுத்தெழுது.

கீழ்வரும் ஒருமைக்குப் பன்மையும் பன்மைக்கு ஒருமையும் எழுது.

| | ஒருமை | பன்மை |
|---|---|---|
| 1. | ஆண் | ஆண்கள் |
| 2. | சிறுவன் | —— |
| 3. | —— | பெண்கள் |
| 4. | மாடு | —— |
| 5. | —— | நாய்கள் |
| 6. | மலை | —— |
| 7. | அவன் அவள் | —— |

# 22. சிறியோர் தொண்டு

| | | |
|---|---|---|
| லாடம் | செஞ்சிலுவை | குவிந்து |
| பொறுக்குதல் | கட்டளை | வழுக்கி |
| ஏறும் | சுகாதாரம் | புழுதி |
| துன்பம் | கெடுதி | அப்புறப்படுத்தல் |
| தைத்தல் | முதன்மை | மெல்ல |
| கிழிந்துவிடும் | பெருக்குதல் | பரிசு |
| கொஞ்சம் | கஞ்சி | |

1. பெரியவர் : தம்பீ, எதற்காகத் தெருவில் கிடக்கும் ஆணிகளைப் பொறுக்குகிறீர்கள் ?

சிறுவன் : தாத்தா, வழியில் ஆணி, லாடம், கண்ணுடித் துண்டு முதலியவை கிடந்தால் நடப்பவர் காலில் ஏறும். அவர்கள் துன்பப் படுவார்கள். சைக்கிள் வண்டி, மோட்டார் வண்டிகளின் சக்கரங்களில் அவை தைத்தால் சக்கரங்கள் கிழிந்து விடும் அல்லவா ? அதற்காக எடுக்கிறோம்.



பெரியவர் : நல்ல பிள்ளைகள்! உங்களை யாரப்பா இவற்றைப் பொறுக்கி எறியச் சொன்னார்கள்.

சிறுவன்: தாத்தா, நாங்கள் சிறியோர் செஞ்சிலுவைச் சங்கத்தைச் சேர்ந்தவர்கள். அச்சங்கத்தின் கட்டளை இது.

பெரியவர்: ஓகோ! தம்பீ, இன்னும் நீங்கள் என்னென்ன உதவி செய்வீர்கள் .

சிறுவன் : 1. தாத்தா, சுகாதாரத்தைப் பெருகச் செய்தல், 2. நோயாளிகளுக்கும், போரில் காயப்படுவோர்க்கும், இன்னும் ஏதாவது துன்பத்துக் குள்ளானேர்க்கும் உதவி செய்தல், 3. உலகில் உள்ள எல்லா நாட்டுச் சிறுவர், சிறுமியர்களுக்குள் ஒற்றுமையை வளர்த்தல்-ஆகிய இவை மூன்றும் எங்களுடைய முதன்மையான வேலையாகும்.

பெரியவர் : ஆகா ! நல்ல வேலை!

2. சிறுவன் : தாத்தா, ஓரமாகப் போங்கள்.



பெரியவர்: நீங்கள் கொடி பிடித்துக் கொண்டு எங்கே போகிறீர்கள் ?

சிறுவன் : அடுத்த ஊரில் மாரியம்மன் திருவிழா நடக்கிறது. அங்கே பெருங்

கூட்டம் கூடும். வண்டிகளும் வரும். அதனால், யாருக்காவது கெடுதி உண்டாகும். அதற்காக வழியை ஒழுங்கு செய்யப் போகிறோம்.

பெரியவர்: ஓகோ! நீங்களும் செஞ்சிலுவைச் சங்கத்தைச் சேர்ந்தவர்களா.



சிறுவன்: ஆமாம், தாத்தா.

3. சிறுமி: வண்டியை மெதுவாக ஓட்டுங்கள். ஓரமாகப் போங்கள்.

4. பெரியவர்: குழந்தைகளே, நீங்கள் எதற்காகத் தெருவைப் பெருக்குகிறீர்கள்?



சிறுமி: தாத்தா, இங்கே பழத்தோல் குவிந்து கிடக்கிறது, நடப்போர் வழுக்கி விழுந்து விடுவார்கள். அதற்காக அவற்றை அப்புறப்படுத்துகிறோம். புழுதியில் நடந்தால் அது மூக்கி

னுள் புகும். அதனுல் நோய் உண்டாகும் அல்லவா ? அதற்காகத் தண்ணீர் தெளித்துப் பெருக்குகிரும்.



5. பெரியவர் : ஐயோ ! அப்பா ! (வழுக்கி விழுதல்)

சிறுமி : தாத்தா! தாத்தா!! நான் சொல்லவில்லையா ? அடடா! கை ஒடிந்து விட்டது. கண்ணகி, சீக்கிரம் துணி கொண்டுவா, கட்டலாம்.

பெரியவர்:ஐயோ! அப்பா!



சிறுமி: தாத்தா, மெல்ல நடந்துவாருங்கள்.மருத்துவ சாலைக்குப் போகலாம்.

பெரியவர் : குழந்தைகளே, நலமாய் இருங்கள்.



சிறுமி : ஐயா, கொஞ்சம் கஞ்சி குடியுங்கள்.

நோயாளி : உம், வேண்டாம்.மருத்துவர் வர வில்லையா ?

சிறுமி : பின்னுல் வருகிறுர்.

6. செல்வி : அல்லி, எங்கே உன் கண்ணுடி ?

தாயார் : என்ன செல்வி?



செல்வி : அம்மா, நேற்று உங்கள் அல்லி தூய்மையாக வந்ததற்காக முதற் பரிசு பெற்றுள்.

தாயார் : அதுவா ? நீ ?

செல்வி : எனக்கு இரண்டாம் பரிசுதான் கிடைத்தது.

## கேள்விகள்

1. செஞ்சிலுவைச் சங்கத்தின் முக்கியமான கொள்கைகள் எவை ?
2. வழியில் எப்படி நடக்கவேண்டும் ?
3. வழியில் கிடக்கும் பழத்தோலை ஏன் எடுத்தெறிய வேண்டும் ?
4. அல்லி வீட்டினரைப் பற்றி நீ என்ன நினைக்கிறாய் ?

## பயிற்சி

1. இப்பாடத்தை நீ கதையாகச் சொல் ?
2. நீ அந்நிகழ்ச்சியினை நீ நேரில் பார்த்தது போல் சொல்.
3. நீங்கள் நாடகமாக நடியுங்கள்.

———

## 23. எங்கள் வேலை—பாட்டு

| | | |
|---|---|---|
| உள்ளம் | குலாவி | வாவென |
| சூழ் | நாடொறும் | தோழர் |
| ஆவலாய் | இசைப்பாட்டு | நழுவுதல் |

காலையில் நேரத் தெழுந்திடுவோம்—முகம்
கைகால் வாயும் கழுவிடுவோம்.
பள்ளிக்கு வேண்டிய பாடங்களை—எல்லாம்
உள்ளம் பதியப் படித்திடுவோம்.
வீட்டினில் உள்ள பழங்கூழை—சுவை
மிக்கதேன் பாலென உண்டிடுவோம்.
வாவெனப் பள்ளி மணி அடித்தால்—உடன்
ஆவலாய்ப் பள்ளிக்குச் சென்றிடுவோம்.
ஆசிரியர் சொல்லும் பாடங்களை—மிக
அன்புடன் கேட்டுத் தெரிந்துகொள்வோம்.
கூடப் படித்திடும் தோழருடன்—ஒன்ருய்க்
கூடிக் குலவியே வாழ்ந்திடுவோம்.
ஆடையைத்தோய்த்தே உடுத்திடுவோம்- நீ
ராடியே நாடொறும் உண்டிடுவோம்.
மாலையில் ஓடியே ஆடிடுவோம்—மகிழ்
வாகவொன்ருகவே கூடிடுவோம்.
வீட்டு வேலைகள் முடித்திடுவோம்—இசைப்
பாட்டுகள் பாடிக் களித்திடுவோம்.
இன்னமும் வேண்டிய செய்திடுவோம்-ஆக
என்ன குறையினி எங்களுக்கே.

## 24. அறிவுரை

| | | |
|---|---|---|
| உறுதி | செலவழிக்க | செய்திகள் |
| தேர்வு | கேள்வி | பிற்காலம் |
| முழுவதும் | பதில் | முதன்மை |
| தேறுவது | பழகுதல் | கணக்கு |
| உடன்பிறந்தவர் | பார்வையிட | விடப்படும் |
| அடக்கம் | கூடிய | கையெழுத்து |

1. பிள்ளைகளே, நாம் இந்த ஆண்டு முழுவதும் இந்த வகுப்பில் இருக்கின்ரேம். இவ்வாண்டுத் தேர்வு விரைவில் வரப்போகிறது. நீங்கள் அதில் தேறினல், விடுமுறைக்குப் பிறகு நான்காம் வகுப்புக்குப் போவீர்கள். நீங்கள் எல்லோரும் நன்ருய்ப் படிக்கவேண்டும். கேள்விகளுக்குத் தகுந்த பதில் எழுதவேண்டும். அப்படிச்செய்தால், நீங்கள் அனைவரும் தேர்வில் தேறுவது உறுதி.

2. இந்த ஆண்டு முழுவதும் நாம் ஒரு குடும்பத்தவர் போல இருந்து வந்தோம். நீங்கள் உடன் பிறந்தவர் போல நடந்து வந்தீர்கள். நீங்கள் என்னிடம் அடக்கமாக வும், அன்பாகவும் இருந்தீர்கள். இதை நான் என்றும் மறவேன். நீங்கள் மற்ற ஆசிரியர்

களிடமும் இப்படியே நடந்து கொள்ள வேண்டும்.

3. தேர்வு முடிந்த பின் உங்களுக்கு விடுமுறை விடப்படும். அது ஒரு மாத காலம் இருக்கும். நீங்கள் அக்காலத்தை நல்லவழியில் செலவழிக்க வேண்டும். பல தமிழ் நூல்களைப் படிக்க வேண்டும்; கையெழுத்துப் படிய நன்கு எழுதிப் பழகவேண்டும்; பாட்டுப் புத்தகங்கள் வாங்கி இசையோடு பாடிப் பழகுதல் வேண்டும்.

4. உங்களில் சிலர் வேறு ஊர்களுக்குப் போகலாம். அப்படிப் போகிறவர்கள், அவ்வூர்களில் உள்ள சிறந்த இடங்களைப் பார்வையிடவேண்டும். அவற்றைப் பற்றிய செய்திகளைச் சிறிய நோட்டுப் புத்தகத்தில் எழுதி வைத்துக் கொள்ளவேண்டும். இது உங்களுக்குப் பிற்காலத்தில் மிகுந்த நன்மையைத் தரும்.

5. என் அருமைப் பிள்ளைகளே, நான் சொன்ன அறிவுரைப்படி நீங்கள் நடப்பீர்களா? அப்படி நடந்தால், உங்களுக்கு எல்லா நன்மைகளும் உண்டாகும்.

எதிர்ப்பதங்கள்: வெளியூர் × உள்ளூர்
பிற்காலம் × முற்காலம்

## கேள்விகள்

1. ஆசிரியர் கூறிய அறிவுரைகள் எவை ?
2. வெளியூர்களுக்குப் போவோர் என்ன செய்ய வேண்டும் ?
3. பிள்ளைகள் விடுமுறையில் என்ன செய்ய வேண்டும் ?
4. ஆசிரியரும், பிள்ளைகளும் மூன்றும் வகுப்பில் எப்படி இருந்தார்கள் ?
5. பிள்ளைகள் ஆசிரியரிடம் எப்படி நடந்து கொள்ள வேண்டும் ?

## பயிற்சி

1. நீ உன் ஆசிரியரிடம் எப்படி நடந்து கொள்கிறாய் ? மூன்று வாக்கியங்களில் பதில் சொல்.

2. நீ கோடை விடுமுறையில் என்ன செய்வாய் ? மூன்று வாக்கியங்களில் பதில் சொல்.

3. நீ வெளியூருக்குப் போனால் என்ன செய்வாய் ? மூன்று வாக்கியங்களில் பதில் சொல்.

4. அனைவரும், எல்லோரும்—பொருள் என்ன?

5. கோடிட்ட இடங்களில் தக்க சொற்களை அமைத்து எழுது:

1. நீங்கள் —— நன்றாய்——வேண்டும்.
2. கை—படிய— எழுதி—வேண்டும்.
3. —ஒரு—காலம்—.

### பயிற்சி

கோடிட்ட இடங்களில் ஏற்ற சொல்லை அமைத்து எழுது.

1. நான் பூந்தோட்டத்துக்குப்———.
(போனேன், போனான்)

2. மரங்கள் காற்றுக்கு———.
(விழுந்தது, விழுந்தன)

3. காக்கையும் புறாவும்———.
(பறந்தது, பறந்தன)

4. நீ நாளை பள்ளிக்கு———.
(வருவேன், வருவாய், வந்தாய்)

5. என் தங்கை மாலை———.
(கட்டினாள், கட்டினான்)

6. அவள் நேற்று———.
(விளையாடுவாள், விளையாடினாள்)

7. தம்பி கணக்குப்———.
(போடுகிறாள், போடுகிறான்)

8. மீன் நீரில் ———.
(நீந்துகின்றன, நீந்துகிறது)

9. அவன் ஊருக்குப்———.
(போகிறார்கள், போகிறான்)

10. சூரியன் காலையில்———.
(மறைகிறது, தோன்றுகிறது)

11. தம்பி என்னோடு பள்ளிக்கு———.
(வந்தான், போனான்)

12. அவர்கள் வேலை———.
(செய்கிறான், செய்கிறார்கள்)

## பயிற்சி 12

முதல் வரிசையிலுள்ள ஒவ்வொரு சொற்களுடனும் இரண்டாவது வரிசையில் உள்ளவற்றில் எதைச் சேர்த்தால் சரியான வாக்கியம் ஆகும்? அவற்றைச் சேர்த்து சரியான வாக்கியங்களை எழுது.

1. நான் — பாய்ந்து பாய்ந்து, ஓடியது.
2. பால்காரி — எந்த வகுப்பில் படிக்கிறாய்?
3. இரத்தம் — மணியைக் காட்டுகிறது.
4. கூடை — வர மறுத்தது.
5. எனக்கு — தினமும் பள்ளிக்கு போகிறேன்.
6. நீ — காய்கறி வாங்கிவைக்க உதவும்.
7. வீரன் — பெய்து கொண்டே இருந்தது.
8. முயல் — வருத்தத்தோடு வீடு திரும்பினாள்.
9. யானை —சுத்தப்படுகிறது.
10. மழை — சுறுசுறுப்பு இல்லாதவன்.
11. சிறியமுள்—இரண்டாம் பரிசுதான் கிடைத்தது.

# 25. செய்யுட் பாடம்

## 1. கல்வி

1. ஓதுவது ஒழியேல்.
2. இளமையில் கல்.
3. எண் எழுத்து இகழேல்.
4. நூல் பல கல்.
5. வித்தை விரும்பு.

—ஆத்திசூடி

6. எண்ணும் எழுத்தும்
கண்எனத் தகும்.

7. கைப்பொருள் தன்னில்
மெய்ப்பொருள் கல்வி.

8. ஓதாதார்க்கு இல்லை
உணர்வொடும் ஒழுக்கம்.

—கொன்றைவேந்தன்

9. ஓதாமல் ஒருநாளும்
இருக்க வேண்டாம்.

—உலக நீதி

எண்-கணக்கு. வித்தை-கல்வி. மெய்ப்பொருள்-அழியாப் பொருள். உணர்வு-அறிவு.

## 2. பெற்ஞேர்

10. தந்தை தாய்ப் பேண்.

—ஆத்திசூடி

11. அன்னையும் பிதாவும்
முன்னறி தெய்வம்.

—கொன்றைவேந்தன்

12. மாதாவை ஒருநாளும்
மறக்க வேண்டாம்.

—உலகநீதி

பேண்-(கிழப்பருவத்தில்) காப்பாற்று. பிதா-தந்தை. மாதா-தாய்.

## 3. பெரியோர் சொல்

13. மேன்மக்கள் சொற்கேள்.

—ஆத்திசூடி

14. மூத்தோர் சொல்
வார்த்தை அமிர்தம்.

—கொன்றைவேந்தன்

15. மூத்தோர்சொல் வார்த்தைதனை
மறக்க வேண்டாம்.

—உலகநீதி

மேன்மக்கள்-அறிவும் அனுபவமும் உடையவர்கள். மூத்தோர்-அறிவு முதிர்ந்த பெரியோர்.

## 4. நட்பு

16. இணக்கம் அறிந்து இணங்கு.

—ஆத்திசூடி

17. நல்லிணக்கம் அல்லது
அல்லல் படுத்தும்.

—கொன்றைவேந்தன்

18. நல்லிணக்கம் அல்லாரோடு
இணங்க வேண்டாம்.

—உலகநீதி

இணக்கம்-சிநேக குணம். அல்லல் துன்பம்.

## 5. நன்றி

19. நன்றி மறவேல்.

—ஆத்திசூடி

20. செய்தநன்றி ஒருநாளும்
மறக்க வேண்டாம்.

—உலகநீதி

நன்றி-உபகாரம்.
செய்த நன்றி- பிறர் செய்த உபகாரம்.

## 6. ஊக்கம்

21. ஊக்கமது கைவிடேல்.

—ஆத்திசூடி

22. ஊக்கம் உடைமை
ஆக்கத்திற்கு அழகு.

—கொன்றைவேந்தன்

கைவிடேல்-விட்டுவிடாதே. ஆக்கம்-செல்வம்.

## 7. கோபம்

23. ஆறுவது சினம்.

—ஆத்திசூடி

24. தீராக் கோபம் போராய் முடியும்.

—கொன்றைவேந்தன்

25. முன்கோபக் காரரோடு
இணங்கவேண்டாம்.

—உலகநீதி

ஆறுவது-தணிய வேண்டுவது. சினம்-கோபம்,

## 8. பொய்

26. கண்டொன்று சொல்லேல்.

—ஆத்திசூடி

27. நெஞ்சாரப் பொய்தன்னைச்
சொல்ல வேண்டாம்.

—உலகநீதி

கண்டு ஒன்று-ஒன்றைக்கண்டு. வேறொன்றை-பொய். நெஞ்சு ஆர-மனமறிய.

## 9. பொருள்

28. பொருள் தனைப் போற்றிவாழ்.

—ஆத்திசூடி

29. திரைகடல் ஓடியும் திரவியம் தேடு.

30. அஃகமும் காசும் சிக்கெனத்தேடு.

—கொன்றைவேந்தன்

31. தனம்தேடி உண்ணுமல்
புதைக்க வேண்டாம்.

—உல

போற்றி-காத்து. திரை-அலை. திரவியம்-
வம். அஃகம்-தானியம். புதைத்தல்-
யில் போட்டுப் பூட்டி வைத்தல்.

## 10. உழவுத் தொழில்

32. பூமி திருத்தி உண்.
33. பருவத்தே பயிர் செய்.
34. நெற்பயிர் விளை.

—ஆத்தி

35. சீரைத் தேடின் ஏரைத் தேடு.
36. மேழிச் செல்வம் கோழை பட
37. தொழூதூண் சுவையின்
உழூதூண் இனிது.

—கொன்றைவேந்த

திருத்தி-சீர்திருத்திப் பயிர் செய்து. பருவ
விளையும் காலம். சீரை-நல்வாழ்வை. ஏர்-பயிர்
தொழில். கோழை-குறைவு. தொழூது-பிற
வணங்கி (சேவித்து). ஆத்திசூடி, கொன்
வேந்தன், உலகநீதி-இம் மூன்று நூல்க
ஔவையார் பாடியவை. உலகநீதி-உ
நாதர் என்பவரால் பாடப்பட்டதென்றும் செ
லுவர்.

குறிப்பு: இச்செய்யுட்களை மனப்பாடம் செ
ஒப்புவிக்கும்படி செய்க. பாட்டின் கருத்து,
தைகளின் மனத்தில் பதியும்படி செய்க.




# Valluvar Tamil Vachakam

BOOK III

By

**Pulavar A. M. KULANDAI**
Senior Tamil Pandit, Board High School, Bhavani.

**SIVALINGAM PUBLISHING HOUSE**
**ERODE.**

 **Price As 8.**